# முகவுரை.

உலகின்கண் வாழாநின்ற உயிர்த்தொகையில் மக்கட் பிறவி மிகவும் உயர்ந்ததென்பது யாருமறிந்ததே. மக்களுளும் ஞானவானாயிருப்பது அரியது. ஒரு மனிதன் ஞானத்தையடைய கற்க வேண்டிய ஞானநூல் ஒன்றை ஸ்ரீ அகஸ்தியமுனிவர் "சரநூல்" என்று பெயரமைந்து செய்யுள் ரூபமாக அருளியிருக்கிறார். அந்த நூல் யாது காரணத்தாலோ செய்யுட்கள் குறைந்து 51 செய்யுட்கள் மாத்திரம் அச்சிடப்பட்டு வழங்கி வருகிறது. அதில் சர உற்பத்தி முதல் லயம் வரையில், செய்யுட்கள் குறைவால் அறிய முடியவில்லை. ஞானசரநூலை இப்புத்தகத்தைக்கொண்டு ஒருவன் கற்க முடியாது. சரத்தைப்பற்றி கூறும் பலநூல்களிருக்கின்றன. அவையாவன:— ஔவை ஞானக்குறள், சீதாராமாஞ்சநேயம், ஞானவெட்டியார், திருமூலர் திருமந்திரம், ஞானக்கும்மி, சுரசிந்தாமணி இன்னும் சித்தர் பாடல்கள் ஏராளமாயிருப்பினும் சரத்தைப்பற்றிய பூரண விபரங்கள் ஒன்றிலேனும் காணப்படவில்லை. ஆகையால் தமிழுலகுக்கு இது ஒரு பெரிய குறையாயிருக்கிறது. வடமொழியில் "சிவஸ்வரோதயம்" என்று ஓர் சரநூல் 395 சுலோகங்களால் ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ பார்வதிக்கு உபதேசக்கிரமமாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. தமிழுலகுக்கு தமிழில் பூரண சரநூல் இல்லாத குறையைத் தீர்ப்பான் பொருட்டு இப்புத்தகம் அச்சிடப்பட்டிருக்கிறது. இதில் குற்றங்கள் காணப்படின் சான்றோர்கள் எமக்குத் தெரிவித்தால் மறுபதிப்பில் திருத்தி அச்சிடப்படும். இப்புத்தகம் ரூபத்தில் சிறியதாயிருப்பினும் அதிமேன்மையுள்ளது. இப்புத்தகத்தை வடமொழியிலிருந்து எமக்கு தமிழில் மொழிபெயர்த்துக்கொடுத்த தஞ்சை அரண்மனை கல்யாணமஹால் சாவளாராம் அய்யர் அவர்கள் நன்றியை யாம் என்றும் மறவோம். தமிழுலகம் வாழ்க. ஸ்ரீ சங்கரன் திருவடி வாழ்க.

**T. S. அமிர்தலிங்கம்,**

சண் வைத்தியன், கரந்தை

தஞ்சாவூர்.



கணபதியென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதியென்றிடக் காலனும் கைதொழும்
கணபதியென்றிடக் கர்மமாதலால்
கணபதியென்றிடக் கர்மமுமில்லையே.

உ

ஸ்ரீ கணேசாய நம:

# சிவ ஸ்வரோதயம்.

1 ஸ்ரீசங்கரர், பார்வதி, கணபதி இவர்களை நமஸ்கரித்து சம்சார தாரகராகிய சற்குருவையும் பரமாத்மாவையும் நான் பஜிக்கிறேன்.

2 பார்வதி ஸ்ரீ சங்கரரைப்பார்த்து, ஹே தேவாதி தேவனுகிய சங்கரரே! என்மேல் கிருபை கூர்ந்து சர்வகாரிய சித்தியாகிய ஞானத்தை எனக்குச் சொல்லும்.

3 ஹே தேவரே! இந்த பிரம்மாண்டம் எப்படி உத்பன்னமாயிற்று. இதனுடைய போஷணை எதனுலுண்டாகிறது பிறகு லயத்தை எப்படியடைகிறது இப்படியாயுள்ள இந்தப் பிரம்மாண்டத்தின் நிர்ணயத்தை எனக்குச் சொல்லும்.

4 ஈஸ்வரியைப் பார்த்து சங்கரர் சொல்லுகிறார். ஹே தேவி! தத்துவத்திலிருந்து பிரமாண்டம் உத்பன்னமாகிறது. தத்துவத்தினுலேயே இதனுடைய போஷணையும் லயமுமுண்டாகிறது. இந்தப் பிரம்மாண்டத்தின் நிர்ணயமும் தத்துவத்தினுலேயே அறியப்படுகிறது.

5 பார்வதி கேட்கிறுள். தத்துவ வாதிகளெல்லாம் பிரம்மாண்டத்திற்கு தத்துவமே மூலகாரணமென்று நிச்சயிக்கிறுர்கள். ஆனுல் தத்துவமென்பது என்ன? அதன் ஸ்வரூபமென்ன? இதை எனக்கு விளங்கச் சொல்லவேண்டும்.

6 மாயைக்கு அன்னியமாயும் நிராகாரமாயும் சுயம்பிரகாசமாயும் ஏகமாயும் சர்வாந்திரியாமியாயுமிருக்கிற பரமாத்மாவினிடத்திலிருந்து ஆகாச முண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயு உண்டாயிற்று.

7 வாயுவிலிருந்து அக்கினி, அக்கினியிலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பிருதிவி, இவ்விதமாயுண்டான இந்த ஐந்து தத்துவம் பிரத்தியேகம். ஐந்தைந்தாக விஸ்தாரமுண்டாயிற்று.

8 அந்தத் தத்துவங்களினாலே இந்தப் பிரம்மாண்டம் உத்பன்னமாயிற்று. அவைகளினாலேயே போஷணையும், கடைசியில் அவைகளிலே லயத்தையுமடைந்து நிற்கின்றது.

9 ஹே சுந்தரியே! இந்த ஐந்து தத்துவங்களினாலே உத்பன்னமான திரேகத்தில் ஐந்து தத்துவம் சூக்ஷ்மரூபமாயிருக்கின்றன. அதை யோகிகள் அறிகிறார்கள்.

10 இப்பொழுது அகாராதி சுவரங்களின் உச்சாரத்திற்கு மூல காரணமாகிய எந்த சரீரஸ்த ஸ்வரமோ அதைப்பற்றி சொல்லுகிறேன். ஸ்வரஞானம் உண்டாயிருக்கையில் ஹம்ஸ சாரத்தின் (சுவாசம் வெளியே வரும்போது ஹம் என்றும் உள்ளே வாங்கும்போது ஸம் என்றும் உச்சாரமாகிறது) ஸ்வரூபத்தின் பேரில் யோகிகளுக்கு பூத பவிஷ்ஷிய வர்த்தமானம் என்னப்பட்ட திரிகால ஞானமுண்டாகிறது.

11 அத்தியந்த ரகசியமானதும் சர்வோபகாரமும், ஸாரபூதமானதுமான ஸ்வரோதயத்தின் ஞானம் எல்லா ஞானத்திலும் மேலான சிரோன்மணியாயிருக்கிறது.

12 இந்த ஸ்வரஞானம் மிக்க சூக்ஷ்மமாயிருந்து அதிமேலான போதமாயும் சத்தியமாயும் விளங்கக்கூடியதாயிருக்கிறது. நாஸ்தீக ஜனங்கள் ஆச்சரியப்படுகிற இந்த ஞானமானது ஆஸ்தீக ஜனங்களுக்குப் பெரிய ஆதாரமாயிருக்கிறது.

## சிஷ்யன் லக்ஷணம்.

13 சாந்தன், சுத்தன், ஆசாரஸம்பன்னன், குருபக்தி தத்பரன் மனச்சலனமற்றவன், கிருதக்ஞன் (அதாவது உபகாரத்தை மறவாதவன்) இப்பேர்ப்பட்ட சிஷ்யனுக்கு ஸ்வர ஞானத்தை உபதேசிக்கவேண்டும்.

14 துஷ்டன், துர்ஜனன், குரோதி, அவிஸ்வாசி, குருபத்தினியை இச்சிக்கிறவன், தைரியமில்லாதவன், துராசாரன் இப்பேர்ப்பட்ட சிஷ்யனுக்கு ஸ்வரஞானம் கொடுக்கலாகாது.

15 ஹே தேவி! நம்முடைய சரீரத்திலிருக்கப்பட்ட ஸ்வரத்தின் ஞானத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன் கேள். ஸ்வர ஞானத்தின் யோகத்தினால் எல்லா ஞானமும் பிராப்தியாகிறது.

16 சர்வவேதம், சாஸ்திரம், சங்கீதம் இவைகள் ஸ்வரத்தினுடைய ஆசிரயத்தினாலேயேயிருக்கின்றன. மூன்று உலகங்களும் ஸ்வரத்தினிடத்திலேயிருக்கின்றன. ஸ்வரமானது ஜகத்தினுடைய ஸ்வரூபமாயிருக்கிறது.

17 புருஷனில்லா கிரகமும், சாஸ்திரப்பயிற்சி இல்லா முகமும், தலையில்லா சரீரமும் எப்படி சிறக்காதோ அவ்விதம் ஸ்வரஞானமில்லாதவன் சோதிடம் சிறக்காது.

18 எல்லா நாடிகளுடைய பேதங்கள் பிராணதத்துவத்தின் பேதம், சுஷும்னையிருகஉள்ள நாடித்திரயங்களின் பேதங்களை யார் அறிகிறானோ அவன் முக்தியை அடைகிறான்.

19 ஸ்வர ஞானத்தில் தேர்ந்த பண்டிதர்களில் அநேகருடைய மதவியவகாரத்திற்கும், நிராகார பரமார்த்தத்திற்கும் வாயுவினுடைய பலம் அவசியமென்றும், சிலர் பரமார்த்தத்திற்கு வாயுபலம் அவசியமில்லையென்றும் சொல்லுகிறார்கள்.

20 சர்வ பிரமாண்டம் பிண்டம் இவைகள் ஸ்வரத்தினாலே நிர்மாணமாயிற்று. ஜகசிருஷ்டி சம்ஹார கர்த்தாவாகிய ஈஸ்வரனும் ஸ்வரரூபமே.

21 ஸ்வரஞானத்தைப்போல ரகசியமானது வேறொன்றுமில்லை. ஸ்வரஞானமே முக்கியமான தனம். ஸ்வரஞானத்தைவிட சிரேஷ்ட ஞானம் வேறொன்றிருப்பதாக பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை.

22 ஸ்வரஞானத்தின் பலத்தினால் (சத்துரு நாசம்), மித்ரலாபமாகமம், லட்சுமிபிராப்தி, கீர்த்தி, சுகம் இவைகள் பிராப்தமாகின்றன.

23 ஸ்வரபலத்தினால் ஸ்திரீ புத்ராதி சம்பத்தி பிராப்தி ராஜதரிசனம் தேவதா சித்தி முதலியவைகளும், ராஜவசியமு முண்டாகிறது.

24 ஸ்வரபலத்தின்பேரில் தேசயாத்திரை, போஜனம், மலமூத்திர விசர்ஜனம் செய்யவேண்டும்.

25 ஹே தேவி! எல்லா சாஸ்திரங்கள் புராணங்கள் ஸ்மிருதிகள் வேதாங்கம், இவைகளில் ஸ்வரஞானத்தைவிட சிரேஷ்ட தத்துவம் வேறொன்றுமில்லை.

26 நாமரூபமுள்ள சகல பதார்த்தங்களும் மாயை. எதுவரையில் ஸ்வரூபதத்துவஞானம் உண்டாகவில்லையோ அதுவரையில் இந்த ஜீவன் மாயையினால் மோகிக்கப்பட்டு மூடனாகிறான்.

27 இந்த ஸ்வரோதய சாஸ்திரம் எல்லா சாஸ்திரத்திலும் உத்தமோத்தமமானது. ஆத்மா (பஞ்சகோசாத்மக ஜீவன்) இதுவே ஒரு கும்பமாயும் இதில் பிரகாசிக்கிற இந்த ஸ்வர சாஸ்திரம் மகா தீபத்தினுடைய ஜ்வாலை போலிருக்கிறது.

28 இந்த ஸ்வரோதய சாஸ்திரம் தனக்குத்தானே தெரிந்து கொள்ளவேண்டியதே தவிர அன்னியர்களின் தர்க்கத்திற்காக ஏற்படவில்லை.

29 இந்த ஸ்வரோதய சாஸ்திரத்தில் விசேஷமாய் திதி, நக்ஷத்திரம், வாரம், கிரஹம், தேவதை, முதலியவைகள் ஒன்றுமில்லை. இதில் பத்திரை, விதிபாதம், வைதிருதி, முதலிய கெட்ட யோகங்களின் தோஷங்களுமில்லை.

30 ஹே தேவி! இந்த ஸ்வர சாஸ்திரத்தில் எவ்விதமான கெட்ட யோகங்களும் கிடையாவே கிடையாது. இனி உண்டாகிறதுமில்லை. ஸ்வரத்தினுடைய பூர்த்தியான சித்தியுண்டானால் எல்லாம் சுபபலனாகவே முடிகிறது.

31 அறிவாளிகள் முதலில் சவிஸ்தாரமாய் தேகத்திலிருக்கப்பட்ட நாடிகளின் அநேக ரூபங்களை அறியவேண்டும். அப்படி அறிகிறபடியால் சரிய ஞானமுண்டாக ஏதுவாகிறது.

32 நாபிஸ்தானத்திலிருக்கப்பட்ட கர்ணிகையின் முனையிலிருந்து 72,000 நாடிகள் உத்பன்னமாயிருக்கிறது. இவைகளெல்லாம் சரீரத்திலிருக்கின்றன.

33 இந்த நாடிகளில் பாம்பைப்போல் சயனித்துக்கொண்டிருக்கிற குண்டலினி என்னும் நாமத்தையுடைய ஒரு சக்தி இருக்கிறாள். அதன்மேல் பத்து நாடிகளும் கீழே பத்துநாடிகளுமிருக்கின்றன.

34 இருபக்கங்களிலும் இரட்டை இரட்டையாய் சேர்ந்து நான்கு கோணலாகப்போகிற நாடிகளிருக்கின்றன. இதுவும் முதலில் சொல்லிய 20 நாடிகளும் சேர்ந்து 24 நாடிகளாகின்றன.

இவைகளில் பத்து வாயுக்களையும் நடத்தும் பத்து நாடிகள் முக்கியமானவை.

35 கோணலாக மேலும் கீழுமிருக்கப்பட்ட எல்லா நாடிகளும் வாயுவுடன் தேகத்தில் சக்கிராகாரமாயிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் பிராணனுடைய ஆஸ்ரயமிருக்கின்றன.

36 மேலேகண்ட எல்லா நாடிகளிலும் பத்து முக்கியமானவை. அவைகளில் இடா, பிங்களா, சுஷுமுனாவாகிய இம்மூன்றும் முக்கியமானவைகளாகும்.

37 4-வது காந்தாரி, 5-வது ஹஸ்தி ஜிஹ்வா, 6-வது புஷா, 7-வது எஷஸ்வினி, 8-வது அலம்புஷா, 9-வது கூஹா, 10-வது ஷங்கினி, இவ்விதமாக 10-நாடிகளையறியவும்.

38 இடா, இடது பக்கத்திலும், பிங்களா வலது பக்கத்திலும், சுஷுமுனா மத்திய பாகத்திலும், காந்தாரி இடது நேத்திரத்திலுமிருக்கிறது.

39 ஹஸ்தி ஜிஹ்வா வலது நேத்திரத்திலும், புஷா வலது செவியிலும், எஷஸ்வினி இடது செவியிலும், அலம்புஷா முகத்திலுமிருக்கின்றன.

40 கூஹா லிங்கத்தினிடத்தும், சங்கினி குதத்திலும், இவ்விதமாகப் பத்து நாடிகளும் சரீர அவயவங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றன.

41 இடா, பிங்களா, சுஷுமுனா, இந்த மூன்று நாடிகளும் பிராணமார்க்கத்தைத் தழுவிக்கொண்டிருக்கின்றன. இவ்விதமாகப் பத்துநாடிகள் சரீரத்தில் முக்கியமானவை.

42 இப்பொழுது நாடிகளின் ஆஸ்ரயத்திலிருக்கிற சரீரத்தின் வாயுக்களின் பேர்களை சொல்லுகிறேன். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், இந்த ஐந்து வாயுக்கள் முக்கியமானவை.

43 நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞ்சயன், இந்த ஐந்தும் உபபிராணங்கள். இப்பொழுது இந்தப் பத்து வாயுக்களின் ஸ்தானங்களை சொல்லுகிறேன். பிராணன் எப்பொழுதும் இருதயத்திலும், அபானன் குதஸ்தானத்திலுமிருக்கின்றது.

44 சமானன் நாபிஸ்தானத்திலும், உதானன் கண்டமத்தியத்திலும், வியானன் சர்வ அங்கத்திலுமிருக்கின்றது.

45 பிராணன் முதல் ஐந்துவாயுக்களுடைய ஸ்தானங்களைச் சொன்னோம். இப்பொழுது நாகன் முதல் ஐந்து வாயுக்களுடைய ஸ்தானங்களைச் சொல்லுகிறேன்.

46 நாகன் ஏப்பத்தையும், கூர்மன் நேத்திர உன்மீலனத்தையும், கிருகலன் தும்மலையும், தேவதத்தன் கொட்டாவியையும் உண்டாக்குகின்றன. இவைகள் வாயுஸ்தானத்திலிருந்து தங்கள் தங்களுடைய காரியங்களை நடத்துகின்றன.

47 தனஞ்சயன் மாத்திரம் சர்வ அங்கத்திலும் வியாபித்துக்கொண்டு பிராணன் வெளிப்பட்ட பிறகும் சரீரத்தைவிட்டுப் பிரிகிறதில்லை. இவ்விதமாக இந்த வாயு ஜீவரூபமாய் சகல நாடிகளிலும் வியாபிக்கின்றது.

48 புத்தியுள்ளவன் இடை, பிங்கலை, சுஷுமுனை இந்த மூன்று நாடிகளின் மேலில் திரேகத்தில் பிராணன் சஞ்சரிக்கிறதை யறியவேண்டும்.

49 இடைநாடி வாமபாகத்திலும், பிங்கலை தக்ஷிணபாகத்திலுமிருக்கின்றது. இடதுபக்கத்து நாடிகளெல்லாம் இடைகலை எனவும் வலது பக்கத்து நாடிகளெல்லாம் பிங்கலை எனவும் படும்.

50 இடைகலையில் சந்திரனும், பிங்கலையில் சூரியனுமிருக்கின்றன. சுஷுமுனையில் ஹம், ஸ என்னும் சிவரூபமாய் சாக்ஷாத் சம்புவானவரிருக்கிறார்.

51 ஸ்வாசமானது வெளிப்படுக்கையில் ஹகார சப்தத்துடனும் உள்ளுக்குப்போகும்பொழுது ஸகார சப்தத்துடனும் செல்லுகின்றன. இதில் ஹகாரம் சிவரூபம். ஸகாரம் சக்திரூபமென்றறியவும்.

52 வாமநாடியை செலுத்துகிற சந்திரன் சக்தி ரூபமாயும், தக்ஷிண நாடியை செலுத்துகிற சூரியன் சிவரூபமாயுமிருக்கின்றார்கள்.

53 சுவாஸமானது ஸகாரத்திலிருக்கும்பொழுது எந்த தானங் கொடுத்தாலும் இந்த லோகத்தில் கோடானுகோடி பலத்தை தருவதாயிருக்கின்றது.

54 இந்தப்பிரகாரமாய் யோகியானவன் களங்கமற்ற சித்தத்துடனிருந்து சந்திர சூரிய நாடி மார்க்கமாய் சர்வத்தையு மறியவும்.

55 ஜீவன் ஸ்திரமாயிருக்கும்பொழுது தத்துவசோதனை செய்யவேண்டும். ஸ்திரமில்லாதிருக்கும்பொழுது செய்யக் கூடாது. எவனொருவன்ஸ் வஸ்த சித்தத்துடன் தத்துவ சோதனை செய்கிறானோ அவனுக்கு இஷ்டசித்தியும், மகா லாபமும், ஜயமும், பிராப்தமாகின்றது.

56 எவனொருவன் சந்திர சூரியன் இவர்களின் சரியான அப்பியாசம் செய்கிறானோ அவனுக்கு பூதபவிஷ்ஷிய ஞானம் ஹஸ்தகதமாகிறது.

57 வாமபாகத்திலுள்ள இடா நாடியானது அமிர்த ரூபமாய் சர்வ ஜகத்தையும் புஷ்டி செய்கிறதாயிருக்கிறது. தக்ஷிணத்திலுள்ள பிங்களா நாடியானது சர்வ ஜகத்தையும் உத்பன்னம் செய்கிறது.

58 நடுவிலிருக்கப்பட்ட சுஷுமுனா நாடியானது சர்வ கர்மத்திற்கும் நிஷேதிக்கப்பட்டதும் குரூரமுமுள்ளது. வாமநாடி சர்வ சுபகாரியத்திலும் சித்தியுள்ளது.

59 வீட்டிலிருந்து வெளியே போகும்போது வாமநாடி சுபம். உள்ளே போகும்பொழுது தக்ஷிண நாடி சுபம். சந்திரன் சமம் சூரியன் விஷமம்.

60 சந்திரன் ஸ்திரீ, சூரியன் புருஷன். சந்திரன் வெண்மை நிறம், சூரியன் நீலவர்ணம். இதனாலே எல்லா சௌபாக்கிய காரியங்களும் சந்திர ஸ்வரத்தில் செய்யவும்.

61 சூரிய நாடியில் உக்கிரமானக் காரியங்களையும் சுஷுமுனையில் பக்தி முக்தி பலதாயகமான கர்மங்களையும் செய்யவும்.

62 சுக்லபக்ஷம் ஆதியில் சந்திரன், கிருஷ்ணபக்ஷம் ஆதியில் சூரியன், இவ்விதக் கிரமமாய் பிரதிபதையிலிருந்து மும்மூன்று நாள் சந்திர சூரியர்களுடைய ஸ்வர உதய காலம் பலமானது.

63 சந்திரன், சூரியன் இந்த ஸ்வரங்கள் கிரமமாய் சுக்லபக்ஷம், கிருஷ்ணபக்ஷம் இதுகளில் தனித்தனி $2\frac{1}{2}$-நாழிகை நடக்

கிறது. இவ்விதமாய் 2½ ஆவர்த்தி (60-நாழிகை) இரவும் பகலுமாகின்றது.

64 தனித்தனி இந்த 2½-நாழிகையில் ஐந்து தத்துவங்களும் நடக்கின்றன. எந்த பிரதிபதையில் முதலில் சந்திர உதயம் சொல்லியிருக்கிறதோ அப்பொழுது சூரிய உதயமும் சூரிய உதய காலத்தில் சந்திர உதயமுமானால் அசுபம்.

65 சுக்லபக்ஷம் பிரதிபதையில் முதலில் சந்திரனும் கிருஷ்ண பக்ஷம் பிரதிபதையில் முதலில் சூரியனும் சுபம். இதனாலே யோகியானவன் ஏகாக்ரசித்தத்துடன் சந்திர சூரியர்களுடைய ஸ்வரத்தையறியவேண்டும்.

66 இரவில் சந்திர ஸ்வரத்தை நடத்தக்கூடாது பகலில் சூரிய ஸ்வரத்தை நடத்தக்கூடாது. இவ்விதமான அப்பியாசத்தை எவன் செய்கிறானோ அவன் தான் யோகி.

67 சூரியனால் சூரியனும், சந்திரனால் சந்திரனும் கட்டுப்படுகிறது சந்திரனை நிறுத்தவேண்டுமானால் இடது பக்கமாய்ப்படுக்க வேண்டும். அல்லது இடது கக்ஷத்தில் யோக தண்டத்தை அமுக்கிப்பிடிக்கவேண்டும். இவ்விதமாக சூரியனை நிறுத்த வலது பக்கமாய்ப் படுப்பதுடன் வலது கக்ஷத்தில் யோக தண்டத்தை அமுக்கிப் பிடிக்கவேண்டும். இக்கிரியை யார் ஒருவன் அறிகிறானோ அவனுக்கு மூன்று உலகங்களும் வசியமாகிறது.

68 சந்திர திதியில் சந்திரமார்க்கமாய் உதயமும், சூரியநாடி மார்க்கமாய் ஹஸ்தமனமுமானால் அப்பொழுது அநேக நல்ல குணங்கள் உத்பன்னமாகின்றன இதற்கு நேர் விரோதம் எப்பொழுதாகிறதோ, அப்பொழுது அநேக தோஷங்கள் உண்டாகின்றன. இதனால் அது சுபகாரியங்களுக்குத் தள்ளப்பட்டது.

69 வியாழன், வெள்ளி, புதன், திங்கள், இந்த வாரங்களில் இடைகலை சர்வ காரியங்களுக்கு சித்திதாயகமாயிருக்கிறது. அதிலும் சுக்கிலபக்ஷமாயிருந்தால் ரொம்பவும் விசேஷம்.

70 சிலர் புதன்கிழமை சுஷும்னை நாடி நல்லதென்கிறார்கள். ஞாயிறு, செவ்வாய், சனி, இந்த தினங்களில் தக்ஷிண நாடி (பிங்கலை) சரகாரியத்திற்கு அதி உத்தமம். அதிலும் கிருஷ்ணபக்ஷமாயிருந்தால் மிக்க விசேஷம்.

71 முதலில் வாயு தத்துவம், இரண்டாவது அக்கினி, மூன்று வது பிருதிவி, நான்காவது அப்பு, ஐந்தாவது ஆகாசம், இவ்விதமாக ஒவ்வொரு 2½-நாழிகையிலும் கிரமமாய் உதய மாகின்றது

72 ஒவ்வொரு 2½-நாழிகைகளிலும் ஐந்து தத்துவங்களும் உத யமாகின்றன. இவ்விதமாக இடா, பிங்களா இரண்டிலும் ஐந்து தத்துவங்கள் உதயமாகின்றன.

73 இரவும் பகலும் 60 நாழிகை இதில் சந்திரனும் சூரியனும் சேருங்காலம் சங்கிரமணமெனப்படும். அவ்வாறு 12 சங்கிர மணம். இந்த பன்னிரண்டும் 12 லெக்கினமெனப்படும். இதில் விருஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம், இவைகள் சந்திரனுடையவை.

74 மேஷம், சிங்கம், கும்பம், துலாம், மிதுனம், தனுசு, இவை சூரியனுடையவை. இவைகளினால் சுபா சுபங்களை நிர்ண யிக்கவும்.

75 கிழக்கு, வடக்கு, இந்தத் திக்குகளில் சூரியனிருக்கிறான். சந்திரன் மேற்கு, தெற்கு திக்குகளிலிருக்கிறான். இத னாலேல் தக்ஷிண நாடியில் சூரிய ஸ்வரம் உதயமாயிருக்கையில் தெற்கு மேற்குத் திக்கில் போகலாகாது.

76 வாம நாடியில் சந்திரஸ்வரம் உதயமாயிருக்கையில் கிழக்கு வடக்குத் திக்குகளில் போகலாகாது மீறிப்போனால் அவ னுக்குச் சத்துருபயம் தவிர போனவன் திரும்பமாட்டான்.

77 அதனாலே ஹிதத்தை அபேக்ஷிக்கிறவன் மேலே நிஷேதிக் கப்பட்டிருக்கிற திசைகளில் போகலாகாது. எந்த ஸ்வரத் திற்கு எத்திசை நிஷேதிக்கப்பட்டிருக்கிறதோ அதில் போ கிறவனுக்கு மரணம் சம்பவிக்குமென்றறியவும்.

78 சுக்கிலபக்ஷம் துதியையில் சூரியஸ்வரம் நடக்கும்பொழுது சந்திர தரிசனமானால் லாபகரமானதும் நல்ல விஷயத்தில் சுகமும் உண்டாகும்.

79 எந்த நாளில் சூரிய ஸ்வர உதயம் சொல்லப்படுகிறதோ அதில் சூரிய ஸ்வரமும், சந்திர ஸ்வர உதய நாளில் சந்திர னும் நடந்தால் எல்லாக் காரியங்களும் சித்தியாகிறது. கால மானது இரவாயிருந்தாலும் பகலாயிருந்தாலும் சரி.

80 சந்திர ஸ்வர காலத்தில் சூரியனும், சூரிய ஸ்வர காலத்தில் சந்திரனும் நடந்தால் பயம், கலகம், ஹானி, சுபகாரியத்திற்கு தடை முதலியவைகள் உண்டாகும்.

81 சூரிய ஸ்வர காலத்தில் அர்த்தமாகாதவைகளும் நிச்சயமாய் அர்த்தமாகும். சந்திர ஸ்வரமாயிருந்தால் அர்த்த ஞானம் உண்டாகமாட்டாது.

## விபரீத லக்ஷணம்.

---

82, சூரியோதய காலத்தில் ஸ்வர உதயம் விபரீதமானல் (சந்திரனுடைய இடத்தில் சூரியன், சூரியனுடைய இடத்தில்
(83) சந்திரன்) அதன் விபரீத பலன் சொல்லுகிறேன். முதல் நாள் விபரீத ஸ்வரம் நடந்தால் மனக்கிலேசம், 2-ம் நாள்
(84) தனஹானி, 3-ம் நாள் பிரயாணம், 4-ம் நாள் இஷ்டநாசம், 5-ம் நாள் ராஜவித்துவம்ஸம், 6-ம் நாள் சர்வ நாசம், 7-ம் நாள் வியாதி துக்கம், 8-ம் நாள் மரணம்.

85 காலை மாலை சாயரக்ஷை இம்மூன்று காலத்திலும் மேல் சொன்ன 8-நாளும் ஸ்வரம் விபரீதமாய் நடந்தால் கெட்டபலன் என்றறியவும். யாதேனும் மாறுதலானல் சுபபலமென்றறியவும்.

86 காலையிலும் மத்தியானத்திலும் சந்திரனும், சாயரக்ஷை சூரியனுமிருந்தால் அப்பொழுது ஜயமும் லாபமும் உண்டாகும். விபரீதமானல் அசுபமென்றறியவும்.

87 வலது, இடது, இந்தப் பக்கங்களில் எந்தப் பக்கத்தில் ஸ்வரம் நடக்கிறதோ அந்தப் பக்கத்துக் காலை முதலில் வைத்து பிரயாணம் செய்தால் காரியசித்தியாகும்.

88 சந்திரக்கலை நடக்கும்போது முதலில் சமஅடி 2, 4, 6-ம் சூரியக்கலை நடக்கும்போது 3, 5, 7, (விஷமம்) இவ்விதமாக அடிவைக்கவும். பூர்ணபாதத்தை முன்வைத்துப் பிரயாணம் செய்தால் சித்தியாகும்.

89 தூங்கி எழும்பொழுது, எந்தப்பக்கத்தில் ஸ்வரம் நடக்கிறதோ அந்தப் பக்கத்துக்கையினல் முகத்தைத் தடவ இச்சித்தபலன் கைகூடும்.

90 அன்னியருக்கு ஒரு வஸ்து கொடுக்கும்பொழுதும், அன்னியரிடமிருந்து வாங்கும்பொழுதும், வீட்டினின்று வெளியே போகும்பொழுதும், எந்த ஸ்வரம் நடக்கிறதோ அந்தப்பக்கத்துக்கை, காலே முதலில் உபயோகிக்கவும். இவ்விதம் செய்தால் காரியம் உத்தமமாகும்.

91 இப்படி செய்தால் காரியத்தில் ஹானியும் கலகமும் உண்டாகிறதில்லை. சத்துருக்களினால் யாதொரு தீங்கும் நேரிடாது. பிரயாணத்தில் யாதொரு சங்கடமுமில்லாமல் வீட்டிற்கு சுகமாய்த் திரும்பலாம்.

92 குரு, பந்து, ராஜன், மந்திரி, இவர்களிடத்தில் வேலையிருக்கும்பொழுது அந்த காரியத்தை பூர்ண பாகத்தினால் ஆரம்பிக்கவும். அப்படி செய்தால் காரியம் நம் இஷ்டம்போல் நடக்கும்.

93 அக்கினி தாஹம், திருட்டுக்கொடுக்கிறது, அதர்ம கிருத்தியம், வாதி நிக்கிரஹம் இவைகளை சூன்னிய நாடியில் செய்யவும். இவ்விதம் செய்கிறவனுக்கு லாபம், ஜெயம், சுகம், இவைகள் உண்டாகின்றன.

94 தூரதேசத்திற்குப் பிரயாணம் சந்திர ஸ்வரத்திலும், சமீப இடத்திற்குப் பிரயாணம் சூரிய ஸ்வரத்திலும் செய்யவேண்டுமென்பது சிலர் அபிப்பிராயம்.

95 முதலில் சொல்லப்பட்டதும், லாபகாரியமும், யுத்தமும்

96 பூர்ண ஸ்வரத்தில் செய்தால் காரிய சித்தியும், சூன்னியத்தில் காரிய ஹானியும் உண்டாகுமென்று சர்வஞ்ஞராகிய ஸ்ரீ சங்கரருடைய வசனம்.

97 விவகாரம், உச்சாடன கர்மம், வஞ்சகம் செய்கிறவர்கள், கோபித்துக்கொண்டிருக்கிற எஜமானன் தரிசனம், திருடர்களுக்கு எதிர்ப்படல், இச்சமயங்களைப் பூர்ண ஸ்வரம் பயங்கரத்தை யுண்டாக்கும். ஆகலால் அவர்களுக்கு முன் சூன்னிய நாடியை வைத்து நிற்கவேண்டும்.

98 தூரதேசப் பிரயாணத்தில் சந்திர ஸ்வரம் நிர்விக்கினமாய் இஷ்ட சித்தியைக்கொடுக்கும். திரும்புகையில் சூரியநாடி மிகவும் நல்லது.

99 ஸ்வர விசேஷத்தினால் அயோக்கியனுக்கு யோக்கியதையும், யோக்கியனுக்கு அயோக்கியதையும், உண்டாகிறபடியால்

மனுஷனானவன் தன் காரியத்திற்கு யோக்கியமான நாடியை உபயோகிக்கவேண்டும். தவிரவும் எப்படி வாயு இருக்குமோ அப்படி நடக்கவேண்டும்.

100 சந்திர ஸ்வரம் நடக்கும்பொழுது அன்னியர்கள் செய்த அபகாரத்தை சகிக்கிறான். சூரிய ஸ்வரத்தில் பலவானையும் வசியம் செய்கிறான். சுஷுமுனை நாடி நடப்பு காலத்தில் மோக்ஷமுண்டாகிறது. இவ்விதமாக ஒரு தெய்வம் மூன்று விதமாயிருக்கிறது.

101 பகலிலாவது, இரவிலாவது சுபம் அல்லது அசுபகாரியமிருந்தால் காரியத்திற்கு தகுந்த ஸ்வரத்தை நடத்திக் கொள்ளவும்.

## இடைகலை.

---

102 ஸ்திரமாகிய காரியங்கள், அலங்காரம், தூரதேச கமனம், ஆசிரம தருமம், கிரகம் வாங்கல், சாமான் வாங்கல், இதுகளுக்குச் சந்திரநாடி உத்தமம்.

103 தாரவு, கிணறு, குளம் வெட்டல், கால் நாட்டல் தேவதாபிரதிஷ்டை, யாத்திரை, தானம், கலியாணம், வஸ்திர தாரணம், அலங்கார தாரணம், இவைகளுக்கு சந்திரநாடி உத்தமம்.

104 சாந்தி கர்மம், பௌஷ்டிக கர்மம், திவ்விய மருந்து ரசாயனம் பந்துக்கள் எஜமானன் தரிசனம், சிநேகிதன் சேர்க்கை, வியாபாரம், தானிய சேர்க்கை இவைகள் சந்திர நாடியில் சுபம்.

105 கிரகப்பிரவேசம், சேவை, கிருஷி, விதை தெளித்தல், இன்னும் சுபகாரியங்கள் சந்திர நாடியில் உத்தமம்.

106 வித்தியாரம்பம், பந்து தரிசனம், உபநயனம், மோ
107 க்ஷம், தர்மம், தீக்ஷை, மந்திரசித்தி, காலவிக்ஞானம், வேத பாராயணம், சதுஷ்பாதம் (ஆடு, மாடு, குதிரை) வீட்டிற்குக் கொண்டு வருதல், வியாதி சிகிச்சை, எஜமானனை அழைத்தல் முதலியவைகளுக்கு சந்திரநாடி சுபம்.

108 முதல் முதல் யானை குதிரை ஏறுதல், அவைகளை
109 வாங்கி கட்டுதல், பரோபகாரம், நிதிஸ்தாபனம், சங்கீதம்,

வாத்தியம், கேளிக்கை, இவை ஆரம்பித்தல், சாஸ்திர விசாரம், பட்டணம் அல்லது கிராமம் இவைகளுள் பிரவேசித்தல், திலகதாரணம் நிலம் வாங்கல் இவைகளுக்கு சந்திர நாடி ஜயம்.

110 துக்கம், சோகம், விஷாதம், ஜுரம், மூர்ச்சை இவைகளும், ஸ்வஜன சேர்க்கை, எஜமானன் சேர்க்கை, அன்னபானாதிகளுக்கு வேண்டியவையும், விறகும், வாங்கல் இவைகள் சந்திர நாடியில் ஜயம்.

111 ஸ்திரிகள் வளையல் முதலானது அணிதல், மழை ஆரம்பம்
112 குருபூஜை, விஷம் இறக்கல். யோகாப்பியாசம் இவைகள் சந்திரநாடியில் ஆரம்பித்தால் சித்தி. மேலும் இந்த நாடியில் வாயு, தேயு, ஆகாசம் இந்த மூன்று தத்துவமும் நிஷேதம்.

113 மேலே சொன்ன கிருத்தியங்களெல்லாம் பகல் இரவு எந்தக் காலத்தில் செய்தாலும் சித்தி. எல்லா சுபகாரியங்களும் சந்திர நாடியில் ஜயம்.

## பிங்கலை.

---

114 கடினமானதும் குரூரமானதும், வித்தையைப் படித்தலும்,
115 படித்ததைப்பாடுதலும், ஸ்திரீ ஸங்கமம், வேசி சமகமம், கப்ப
116 லில் ஏறுவது, துஷ்ட கிருத்தியம், மதுபானம், வீரமந்திரங்களின் உபாஸனை, தேசவித்துவம்ஸம், விரோதிக்கு விஷம் கொடுத்தல், சாஸ்திர அப்பியாஸம், கமனம், வேட்டையாடல், மிருகங்களின் சண்டை.

117 சூதாடல், குதிரை, யானை, இரதம் இவைகளை சிக்ஷை செய்கி
118 றதாவது அல்லது அவைகளில் ஏறுதல், திருடல், எந்திரம்
119 தந்திரம், கோட்டை, மலை, இவைகளின் மேல் ஏறுதல், சில்பம் பழகுதல், மாரண உச்சாடன முதலான ஷட்கர்மம், யட்சணி, யட்சதேவதைகள், பிசாசு, விஷம், இவைகளின் நிவாரணம், கழுதை, ஒட்டை, எருமை, யானை, குதிரை இவைகளில் ஏறுதல், ஆற்றைக் கடத்தல், தீவிரமான மருந்து, லிபி எழுதுதல் இதுகளுக்கெல்லாம் தக்ஷிணநாடி உத்தமம்.

120 மாரணம், மோஹனம், ஸ்தம்பனம், வித்வேஷணம், உச்சாட
121 னம் வசீகரணம், பிரேரணம், ஆகர்ஷணம், க்ஷோபம், தானம்,

கிரய விக்கிரயம், பிரேதஹாரணம், சத்துரு நிக்கிரஹம், போகம், ராஜதரிசனம், போஜனம், ஸ்நானம், சத்துருவிடத்தில் சண்டை இவைகளுக்கு பிங்கலைநாடி உத்தமம்.

122 123 போஜனத்தினால் அக்கினி மந்தம் ஏற்படுதல், ஸ்திரீ வசீகரணம், சயனித்தல் இவைகள் சூரிய ஸ்வரத்தில் செய்யவும். சாராம்சம் குரூரமானதும், சாமானதுமான காரியங்களெல்லாம் சூரிய ஸ்வரத்தில் செய்தால் சித்தி. இதில் யாதொரு சந்தேகமில்லை.

## சுஷுமுனை.

124 ஸ்வரமானது க்ஷணநேரம் வலத்திலும் இடத்திலும் செல்லும்போது சுஷுமுனையின் காலமென்றறியவும். இந்த சுஷுமுனை எல்லா காரியத்தையும் நாசம் செய்கிறதாயிருக்கிறது.

125 சுஷுமுனை நாடியிடத்தில் பிரளயகால ரூபமாகிய அக்கினி எப்பொழுதுமிருந்துகொண்டிருக்கிறபடியால் அது விஷத்திற்கு சமானமாய் காரியாரம்பங்களுக்கு நிஷேதமாயிருக்கிறது. ஆகையால் அதில் யாதொரு காரியம் செய்தால் நாசமாகிறது.

126 127 எப்பொழுது கிரமம் தப்பி இரண்டு நாடிகளும் சென்றுகொண்டிருக்கிறதோ அப்பொழுது அவனுக்கு அசுப பலமென்றறியவும். யாருக்கு நாடியானது க்ஷணநேரம் வலதும் க்ஷணநேரம் இடதுமாய் செல்லுகிறதோ அவனுக்குச் சங்கடம் வந்ததென்றறியவும்.

128 எப்பொழுது இரண்டு நாடிகளினுடைய சஞ்சாரம் உண்டாகிறதோ அக்காலம் விஷத்திற்கு சமானமாயிருக்கிறபடியால் அவ்வித சுஷுமுனை நாடியில் எப்பேர்ப்பட்ட குரூரமும் சாந்தமுமான காரியங்கள் செய்யலாகாது. அது நிஷ்பலனாய் முடியும்.

129 130 ஜீவிதம், மரணம், லாபம், நஷ்டம், பிரஷ்னை, ஜெயம், அபஜெயம், இவ்விதமான கேள்விகளை ஸ்வரம் விபரீதமாய் நடக்கும்பொழுது செய்யலாகாது. ஈஸ்வர ஸ்மரணை மாத்திரம் செய்யவும். ஈஸ்வர ஸ்மரணை செய்த பிறகு யோகாப்பியாசம் முதலாகிய பாரமார்த்திக கிருத்தியங்கள் செய்யவும். ஜெயம், லாபம், சுகம், இவைகளில் இச்சையுடையவர்கள் பாரமார்த்திகத்தைத் தவிர வேறு காரியம் செய்யலாகாது.

131 சூரிய ஸ்வரத்தில் சுஷும்னா நாடி செல்லும்பொழுது சாபம் அல்லது வரம் கொடுத்தால் அது நிஷ்பிரயோஜனமாகும்.

132 நாடிகளினுடைய சங்கிரமண காலத்திலும் தத்துவங்களின் சலன காலத்திலும் தானம் முதலாகிய புண்ணிய கர்மங்கள் செய்யவேண்டும். சுபகாரியங்கள் செய்யலாகாது.

133 எந்தக்காலத்தில் விஷம ஸ்வரத்தின் உதயமாயிருக்கிறதோ அப்பொழுது யாதொரு காரியத்தையும் மனதில் நினைக்கக் கூடாது. விஷம ஸ்வரத்தில் யாதொருவன் பிரயாணம் செய்கிறானோ அவனுக்கு மரணம் சம்பவிக்கிறது. அநேக விதமான க்லேசங்கள் பிராப்தமாகிறது. இதற்கு சந்தேகமில்லை.

134 முன்னும், இடது பக்கமும், ஊர்த்துவமும் சந்திரன் பலவான். வலது பக்கமும், பின்னும் கீழும் சூரியன் பலவான். ஆகையால் வித்வான் பூர்ண சூன்னிய ஸ்தானங்களை, விசாரணை செய்யவேண்டும்.

135 சந்திர ஸ்வர காலத்தில் வருகிற தூதன் இடது பக்கம், மேல்பக்கம், அக்ர பாகத்தில் வந்தால் சுபம். அவ்விதமே சூரிய ஸ்வரகாலத்தில் பின்னால் வலது பக்கம் கீழ் பாகத்தில் வந்தால் சுபமென்றறியவும்.

136 137 138 அனாதியாயும் நிஷ்கிரியையாயும் நிட்சலமாயுமுள்ள (சுஷும்னை) விஷம சந்தியானது பரதத்துவமாகிய பிரம்மத்தில் லீனமாகிறது. அதை சாதுக்கள் சந்தியா என்று சொல்லுகிறார்கள். பிரசித்தமாகிய வேதத்தை வேதமென்று சொல்லுகிறதில்லை. காரணம் அதனிடத்தில் வேதத்துவமில்லை. எதனாலே பரமாத்மாவை அறியப்படுகிறதோ அதற்குத்தான் வேதமென்று சாதுக்களால் சொல்லப்படுகிறது. பிராமணன் பகல் இரவு இவைகளின் சந்தியில் ஸந்தியாவந்தனம் செய்கிறான். இதற்கு சாதுக்கள் ஸந்தி என்று சொல்லுகிறதில்லை. ஆனால் சுஷும்னை நாடியிலிருக்கப்பட்ட பிராணனைத்தான் ஸந்தி என்பார்கள்.

## நாடிபேதம்.

139 ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்றப்பட்ட தேவாதி தேவனே! உங்களுடைய இருதயத்திலிருக்கப்பட்ட ரகஸ்யத்தை எனக்குச் சொல்லவேண்டும்.

140 ஹே பார்வதி! அத்தியந்தம் ரகஸ்ஸியமாகிய ஸ்வர ஞானத்தைத் தவிர வேறு ரகஸ்ஸியமில்லை. இதுதான் நமது இஷ்ட தெய்வம். எந்த யோகியானவன் ஸ்வர அப்பியாசியோ அவனே சிரேஷ்ட யோகி.

141 பஞ்ச தத்துவத்திலிருந்து சிருஷ்டி, உத்பன்னமும் லயமுமாகிறது. இதனாலே பஞ்ச தத்துவம் முக்கியமானது. நிர்குணமாகிய பரமாத்மா இந்த ஐந்து தத்துவத்திலிருந்தும் வேறாக இருக்கிறார்.

142 யோகியானவன் அப்பியாஸ யோகத்தினால் ஸ்வரத்திலுள்ள தத்துவங்களின் பெயரை அறியவேண்டும். யாரொருவனுக்கு தத்துவத்தினுடையதும் ஸ்வரத்தினுடையதும் பூர்ண ஞானமிருக்கிறதோ அப்பேர்ப்பட்ட யோகி பூதங்களினுடைய துஷ்ட சின்னங்களை சகஜமாய் அறிகிறான்.

143 பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாஸம், இந்த ஐந்து பூதங்களை பஞ்ச தத்துவம் பஞ்ச பூதங்களை இந்த ஜகமாயிருக்கிறது. இந்தப் பஞ்ச தத்துவத்தை யார் அறிகிறானோ அவனே பூஜிக்கப்பட்டவன்.

144 பூலோக முதல் சத்தியலோகம் வரையிலுள்ள சர்வலோகத்தின் ஜீவராசிகளின் தேகத்தில் தத்துவங்கள் வெவ்வேறுயில்லை. எல்லாவற்றிலும் பஞ்சபூதம் ஒரேமாதிரியாயிருக்கிறது. ஆனால் சரீரத்திலுள்ள நாடிகள் மாத்திரம் வெவ்வேறாயிருக்கின்றன.

145 இடைகலை பிங்கலையில் ஐந்து தத்துவங்களினுடைய உதயம் ஐந்தாயிருக்கிறது. ஹே சுந்தரியே! அந்த தத்துவத்தினுடைய ஞானத்தை எட்டுவிதமாய் உனக்குச் சொல்லுகிறேன்.

146 முதலில் தத்துவத்தினுடைய சங்கை. 2-வது சுவாசத்தினு-
147 டைய ஸந்தி. 3-வது ஸ்வரத்தின் சின்னம். 4-வது ஸ்தா-
148 னம். 5-வது தத்துவத்தின் நிறம். 6-வது பிராண நிலை. 7-வது வாசனை 8-வது சுவாசம் செல்லும் அளவின் லக்ஷணம், இந்த 8-விதமாய் சராசரத்தில் வியாபித்து நிற்கின்றது. ஹே பார்வதி! ஜகத்தில் ஸ்வர தத்துவ ஞானம் முக்கியம், மற்றது சிரேஷ்டமல்ல.

149 யோகியானவன், பிரபாத காலமுதல் ஸ்வரத்தையும் அதன் தத்துவ உதய காலத்தையும் மிகவும் ஜாக்கிரதையாய் கவ

னிக்கவேண்டியது. எந்த காரியம் செய்தாலும் ஸ்வரத்தி னுடைய அநுஸந்தானத்திலேயே யிருக்கவேண்டும். ஸ்வர ஞானமுடைய யோகியானவன் கேவலம் காலக்ஷேப நிமித் தம் கர்மம் செய்கிறானே யொழிய அவனுடைய லக்ஷியமெல் லாம் ஸ்வரத்தினிடத்திலேயே யிருக்கும்.

150 தத்துவ ஞானம் உண்டாக வேண்டியதற்காக ஷண்முகி முத் திரையை அப்பியசிக்கவும். அது எவ்விதமென்றால், கை களின் பெருவிரல் இரண்டினால் காதையும், நடுவிரல் இர ண்டினால் நாசியையும், தர்ச்சினி இரண்டினால் கண்களையும், மற்ற விரல்களினால் வாயையும் அழுத்திக்கொண்டு இருப்ப தற்கு ஷண்முகி யென்று யோகிகள் சொல்லுகிறார்கள்.

151 இவ்விதம் செய்வதினால் ஐந்து தத்துவங்களினுடைய ஞான முண்டாகிறது. இதில் 5-விதமான நிறங்கள் காண்கின்றன. 1-மஞ்சள் 2-வெள்ளை 3-சிவப்பு 4-நீலம் 5-பலவர்ணம். இதில் பிருதிவி—மஞ்சள், அப்பு—வெள்ளை, தேயு-சிவப்பு, வாயு—நீலம், ஆகாசம்—சித்திர விசித்திர வர்ணம்.

152 சுவாசத்தை இழுத்துக்கொண்டபின் மேல் சுவாசத்தை விட்டால், அதின் பேரில் என்ன ஆகிருதி, காணப்படு கிறதோ, அதைக்கொண்டு மனுஷனுடைய தத்துவத்தை யறியவும்.

153 பிருதிவி—சதுரஸ்ரகோணம், அப்பு—அர்த்தசந்திரன், தேயு திரிகோணம், வாயு—சக்ராகாரம், ஆகாயம்—அநேக பிந்து க்கள். இதைக்கொண்டு இன்ன தத்துவம் உதயமாயிருக்கிற தென்று அறியவும்.

154 சுவாஸமானது செல்லும் பொழுது மூக்கில் மேலும் கீழும் படாமல் மத்தியில் சென்றால், பிருதிவி தத்துவம். மூக்கின் கீழ்பாகத்தை ஒட்டிச்சென்றால், அப்பு தத்துவம். மூக்கின் மேல் பாகத்தை ஒட்டிச்சென்றால், தேயு தத்துவம் கோண லாய் சென்று கொண்டிருந்தால், வாயு தத்துவம். இரண்டு ஸ்வரமும் வெளியில் வராமல் உள்ளேயிருந்தால், ஆகாச தத்துவ மென்றறியவும்.

155 அப்பு—வெள்ளை, பிருதிவி—மஞ்சள், அக்னி—ரக்தவர் ணம், வாயு—நீலவர்ணம், ஆகாசம்—சித்திரவர்ண மென்ற றியவும்.

156 அக்னி இரண்டு தோள்களிலும், வாயு நாபி மூலம், பிருதிவி முழங்கால், அப்பு பாதத்தின் கடைசி, ஆகாசம் சிரசு.

157 பிருதிவி—மதுரம், அப்பு—துவர்ப்பு, தேயு—உறைப்பு, வாயு—புளிப்பு, ஆகாசம்—கசப்பு.

158 வாயுவு 8-அங்குலம், அக்கினி 4-அங்குலம் பிருதிவி 12-அங்குலம், அப்பு 16-அங்குலம், ஆகாயம் அதே பிடத்தில்.

159 அக்கினி மேலே செல்லுகிறபடியாலும் அது பிருத்துவானதாலும் அதில் மாரணக்கிரியையும், அப்பு கீழ்நோக்கி செல்லுகிறபடியால் அதில் சாந்திகர்மமும், வாயு கோணலாய் செல்லுகிற படியால் அதில் உச்சாடனக்கிரியையும், பிருதிவி மத்தியில் செல்லுகிறபடியால் ஸ்தம்பனக்கிரியையும் செய்யவும். ஆகாசம் எங்கும் வியாபித்திருக்கிறபடியால் அதில் யாதொன்றும் செய்யலாகாது.

160 பிருதிவி தத்துவத்தில் ஸ்திரகர்மம், அப்புவில் சரகர்மம், தேயுவில் குரூரமான கர்மம், வாயுவில் மாரண உச்சாடன கர்மங்கள் செய்தால் சித்தி.

161 யோக அப்பியாசத்தைத்தவிர ஆகாச தத்துவத்தில் யாதொரு கர்மமும் செய்யக்கூடாது. செய்தால் காரிய நாசம்.

162 பிருதிவி அப்பு இவை இரண்டும் சித்திப்பிரதம் அக்கினி மிருத்திகாரகம். வாயு க்ஷயகாரகம், ஆகாசம் நிஷ்பலம்.

163 பிருதிவி தத்துவம் நீடித்த லாபத்தையும், அப்பு தத்சமய லாபத்தையும், அக்கினி வாயு ஹானியையும் கொடுக்கும் ஆகாசத்தில் சர்வமும் நிஷ்பலம்.

164 மஞ்சள் வர்ணமும். மெதுவாய் செல்லக்கூடியதும், மோவாய்க்கட்டை வரையில் கீழும் மேலும் படாயலும் நடுவில் செல்லுகிறதும், பெரிய சப்தமும் கொஞ்சம் உஷ்ணமுமுடைய எந்த சுவாசமோ, அது ஸ்திரகாரியத்தை சித்தி செய்யக்கூடியதுமான பிருதிவி சம்மந்தமான வாயு ஆகும்.

165 கீழே செல்லக்கூடியதும், பெரிய சப்தமும், சீக்கிரமாய் செல்லக்கூடியதும், சீதளமும் 16-அங்குல பரிமாணமுடையதுமானது. அப்பு சம்மந்தமானது. இது சுபகர்மம் சித்தி செய்யக்கூடியது.

166 பம்பரம்போல் செல்லக்கூடியதும் அதி உஷ்ணமும் ரக்தவர்ணமும் 4-அங்குலம் மேல் செல்லக்கூடியதுமான வாயு தேயு சம்மந்தமானது. இது குரூரமான கர்ம சித்தி கொடுக்கக் கூடியது.

167 சீதோஷ்ணம், கிருஷ்ணவர்ணம், கோணலாயும் எட்டு அங்குலம் செல்லக்கூடியதுமான சுவாசம் வாயு சம்மந்தமானது. இதானது சகாரியசித்தி செய்யக்கூடியது.

168 சாந்த வாயுவானது, ஸமசமமாயும், எல்லா தத்துவங்களின் குணத்தையுமுடையதோ அது ஆகாச சம்மந்த வாயுவாகும். இதில் யோக சித்தியுண்டாகும்.

169 பிருதிவி தத்துவம் நிறத்தில் மஞ்சளாயும், வடிவம் நாலு மூலையாயும், ருசி மதுரமாயும், நடுவில் செல்லக்கூடியதும் 12-அங்குலம் பரிமாண முடையதும் அநேக காரியங்களுக்கு உபயோகமாயும் இருக்கிறது.

170 அப்பு தத்துவம் வெள்ளை நிறம். வடிவம் அர்த்த சந்திரன் (பிறை). ருசி துவர்ப்பு. சரமும் 16-அங்குலம் பரிமாண முடையது. இதனால் லாபமுண்டாகும்.

171 தேயு தத்துவம் ரக்தவர்ணம். திரிகோணம். உவர்ப்பு. மேல் நோக்கிச் செல்லக்கூடியது. தேஜஸையுடையது. நாலு அங்குல பரிமாண முடையது.

172 வாயு தத்துவம், நீலவர்ணம். சக்கிராகாரம். புளிப்பு. கோணலாய் செல்லக்கூடியது. சபலம். 8-அங்குல பரிமாண முடையது.

173 வர்ணம், வடிவம், ருசி, செல்லும் ஸ்தானம் இந்த நாலும் ஸ்பஷ்டமில்லாதது. ஆகாச தத்துவம். இது பிரவர்த்தி காரியங்களில் நிஷ்பலத்தை கொடுக்கக்கூடியது. மோக்ஷ மார்க்கத்திற்கு மாத்திரம் சாதகமுடையது

174 பிருதிவி, அப்பு-சுபம், தேயு மத்திமம். வாயுவு ஆகாசம், காரியஹானி விருத்தியும் செய்யக்கூடியது. புருஷாளுக்கு அசுபம் கொடுக்கக்கூடியது.

175 கிழக்குமுதல் மேற்குபரியந்தம் பிருதிவி தத்துவம். தெற்கு தேயு. வடக்கு வாயு. மத்தியதிசை ஆகாசம். இவ்விதமாய் தத்துவங்களின் திசை வியாபித்திருக்கின்றன.

176 சந்திர ஸ்வரத்தில் பிருதிவி அப்புவும், சூரிய ஸ்வரத்தில் அக்கினிதத்துவமும் நடக்கையில் கிரமமாய் ஸௌமியமும். குரூரகாரியமும் சித்தியுண்டாகும். இதில் சந்தேகமேயில்லை.

177 பகலில் பிருதிவி தத்துவமும், இரவில் அப்பு தத்துவமும், லாபகரமானது. அக்கினிதத்துவத்தில் மிருத்துவும், வாயுதத்துவத்தில் க்ஷயமும் (ஹானி) ஆகாசதத்துவத்தில் ஸ்தானபேதமு முண்டாகிறது.

178 பிருதிவி தத்துவத்தில் தீர்க்க காலம் ஜீவித்திருக்க உபாயம், ஜயம், லாபம், கிருஷி, தன கர்மம், மந்திரம், யுத்த கர்மம், ப்ரஷ்ணம், கமனம், ஆகமனம், இவைகள் செய்ய சுபம்.

179 பிருதிவி, அப்பு தத்துவத்தில் சத்துரு வந்தால் சுபம். வாயு தத்துவத்தில் வந்தால் வேறிடம் போவான். ஆகாசம் தேயு தத்துவத்தில் சத்துரு வந்தால் ஹானியும், மிருத்துவு முண்டாகும்.

180 ப்ரஷ்ணம் கேட்க வந்தால் தத்துவத்தினறிந்து சொல்லவும். பிருதிவி தத்துவமாயிருந்தால் விருக்ஷங்களைப்பற்றி, அப்பு தத்துவமாயிருந்தால் ஜீவனைப்பற்றி, தேயு தத்துவமாயிருந்தால் தாதுக்களைப்பற்றி, ஆகாச தத்துவமாயிருந்தால் ஒன்றுமில்லையென்றறிந்து சொல்லவும்.

181 பிருதிவி தத்துவமாயிருந்தால் அநேகருடனும், அப்பு, வாயு, தத்துவத்தில் ஒருவராகவும், தேயு தத்துவத்தில் இருவராகவும், போகவேண்டும். ஆகாச தத்துவத்தில் போகக் கூடாது.

182 தக்ஷிண நாடியில் அக்கினி தத்துவமாயிருந்தால் அது செவ்வாய், பிருதிவி தத்துவமாயிருந்தால் சூரியன், அப்பு-சனி, வாயு—இராகு.

183 வாம நாடியில் (இடைகலை) அப்பு தத்துவம், சந்திரன். பிருதிவி, புதன். வாயு, குரு தேயு, சுக்கிரன். இந்த கிரகங்கள் சந்திர ஸ்வரத்தில் சர்வ காரியங்களுக்கும் சுபம்.

184 சுழிமுனை நாடியில் பிருதிவி தத்துவம் புதன், அப்பு—சந்திரன், சுக்கிரன்—தேயு, சூரியன்—செவ்வாய், வாயு—இராகு சனி, ஆகாசம்—குரு.

185 ஆரிய ஸ்வரத்தில் யாரேனும் பிரயாணப்பட்டுவிட்டார்களாவென்று ப்ரஷ்ணம் கேட்டால் அந்தக் காலத்தில் ஸ்வாசத்தில் இராகு இருந்தால் ஷடியார்கள் இருப்பிடத்தை விட்டு புறப்பட்டு விட்டார்களென்று சொல்லவும்.

186 அப்பு தத்துவத்தில் கேள்வி கேட்டால் சீக்கிரம் வருவான். பிருதிவியில் போனவிடத்தில் அங்கேயே சுகமாயிருப்பான். வாயு தத்துவத்தில் அன்னிய இடங்களில் போயிருப்பான். தேயுவாயிருந்தால் மரணமடைந்திருப்பானென்று சொல்லவும்.

187 பிருதிவி தத்துவத்தில் கேள்வி கேட்டால் விருக்ஷங்களைப் பற்றியென்றும், அப்பு தத்துவமாயிருந்தால் சுபகாரியத்தைப்பற்றியென்றும், அக்கினி தத்துவமாயிருந்தால் உலோகங்களைப்பற்றியென்றும், ஆகாச தத்துவமாயிருந்தால் சூன்யமென்றும் சொல்லவும்.

188 பிருதிவி அப்பு இந்தத் தத்துவங்கள் நடக்கும்போது கேள்வி கேட்டால் பிரயாணத்திலிருக்கப்பட்டவன் சந்தோஷமாயும், புஷ்டியாயும், பிரியமாயும், கிடை இவைகளோடிருப்பானென்றும்; தேயு, வாயு, இவைகள் நடக்குங் காலங்களில் கேட்டால் பிரயாணத்திலிருக்கப்பட்டவன் முறையே நித்திரையிலும், ஜ்வரத்திலுமிருப்பானென்று சொல்லவும்.

189 ஆகாச தத்துவத்தில் கேள்வி கேட்டால் மரணமென்று சொல்லவும். இப்படியே 12-கேள்வி தத்துவங்களையும் தெய்வ ஞானியானவன் பிரயத்னத்தினாலேயறிவான்.

190 பிருதிவி, அப்பு, தேயு, வாயு, இந்தத் தத்துவங்களுக்கு முறையே கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்குத் திசைகளில் பலனுண்டு.

191 ஹே சங்கரி! பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், இந்த ஐம்பூதத்தினால் தேகமானது உண்டாயிருப்பதால் பஞ்ச பூதாத்மகமென்று சொல்லப்படும்.

192 எலும்பு, மாம்சம், தோல், நாடி, உரோமம், இவைகளானது பிருதிவியின் கூறென்று வேதாந்த சாஸ்திரத்தில் கூறப்படுகிறது.

193 மயிர், இரத்தம், கொழுப்பு, மூத்திரம் சளி, எச்சல், அப்புவின் கூறு.

194 பசி, தாகம், நித்திரை, தேஜஸ், சோம்பல், இவைகள் அக்கினியின் செய்கை.

195 ஓடுதல், அசைதல், ஒடுங்கல், பூரித்தல், பாவுதல், இவைகள் வாயுவின் செய்கை.

196 கோபம், துவேஷம், லஜ்ஜை, பயம், மோகம், இவைகள் ஆகாசத்தின் செய்கை

197 பிருதிவி 50 விநாடி, அப்பு 40, அக்கினி 30, வாயு 20, ஆகாசம் 10, இவ்விதமாக மேற்கண்ட 5 தத்துவங்களும் 2½-நாழிகைக்குள் நடக்கின்றன.

198 பிருதிவி தத்துவத்தில் எப்பொழுதும் லாபமுண்டாகிறது. அப்பு தத்துவத்தில் தாத்கால லாபமுண்டாகிறது வாயு தத்துவத்தில் சுவல்ப லாபமுண்டாகிறது. அக்னி தத்துவத்தில் லாபம் சித்தமாயிருந்தாலும் சூன்யமாகும்.

199 பிருதிவிக்கி ஐந்து குணம், அப்புவிற்கு 4, அக்கினிக்கு 3, வாயுவுக்கு 2, ஆகாசத்திற்கு 1.

200 சீறுகிறதும், சிதறினதும், நாளடைவில் ஜீர்ணமானதும், விழுந்ததும் இவ்விதமான பிருதிவியானது கல்விதக் காரியங்களிலேயும் தன்னுடைய அவஸ்தையைப் போல் பலனைக் கொடுக்கிறது.

201 அவிட்டம், ரோகணி, கேட்டை, அனுஷம், திருவோணம், உத்திராடம், அபிஜித், இந்த நக்ஷத்திரங்கள் பிருதிவி தத்துவம்.

202 பூராடம், ஆயில்யம், மூலம், திருவாதிரை, இரேவதி, உத்திராட்டாதி, சதயம், இவை அப்பு தத்துவம்.

203 பரணி, கிருத்திகை, பூசம், மகம், பூரம், பூரட்டாதி, சுவாதி இவை தேயுவின் தத்துவம்.

204 விசாகம், உத்திரம், அஸ்தம், சித்திரை, புனர்பூசம், அசுவதி, மிருகசீரிடம், இவை வாயுவின் தத்துவம்.

205 நாடி நடக்கின்ற பக்கத்தில் அதாவது பூர்வாங்கத்தில் நின்றுகொண்டு ஒருவன் கேள்வி கேட்பானாகில். சுபாசுபக்காரியங்கள் சர்வமும் சித்தியாகும் சூன்யபாங்கத்திலிருந்து கேட்பானாகில் காரிய நாசமென்று சொல்லவும்.

206 ச்வாசமானது சுபதத்துவத்தில் உதயமாயிருந்தாலும், அந்தச் ச்வாசம் வெளிப்படுங்காலங்களில் ஒருவன் கேள்வி கேட்பானாகில் காரியம் சித்தி பெறாது. இவ்விதமாகவே சந்திர சூரிய ஸ்வரமும் உட்செல்லுங்காலமாயிருந்தால் சர்வ காரியமும் சித்தியாகும்.

207 ஸ்ரீ இராமனும் அர்ச்சுனனும் இந்தத் தத்துவத்தினாலேயே ஜெயமடைந்தார்கள். கௌரவர்கள் தத்துவ விபரீதத்தினாலேயே நாசமடைந்தார்கள்.

208 ஜன்மாந்திர சுகிர்தத்தினாலும், அல்லது குருவினுடைய கிருபையினாலும், பக்தரான புண்ணியமுடைய ஜனங்களுக்கு தத்துவ ஞானம் பிரகாசமாகும்.

209 "லம்" பிருதிவி தத்துவத்தின் பீஜம். சதுஷ்கோணம். சுவர்ண நிறம், சுகந்தம், இந்த தத்துவத்தை தியானம் செய்கிறவர்களுக்கு தேகத்தில் சுவர்ணச் சாயை. சுகந்தம் லகுத்துவம் இவைகள் உண்டாகின்றன.

210 "வம்" அப்புவின் பீஜம். அர்த்தசந்திராகாரம். இந்த தத்துவத்தை தியானம் செய்கிறவர்களுக்கு பசி தாகம் அற்றுவிடுகிறது. தண்ணீருள் அமிழ்ந்திருக்கல் சாத்தியமாகிறது.

211 "ரம்" அக்னியின் பீஜம். திரிகோணம். ரக்த வர்ணம், இந்த தத்துவத்தை தியானம் செய்கிறவனுக்கு அதிக ஆகாரமும், ஜலமும் சீக்கிரம் ஜீர்ணமாய்விடுகிறது. வெய்யிலினுடைய தாபத்தையும், நெருப்பினுடைய காங்கையையும் சகிக்கும்படியான சக்தியுண்டாகிறது.

212 "யம்" வாயு தத்துவம். சக்ராகாரம், நீலவர்ணம் இந்த தத்துவத்தை தியானம் செய்கிறவர்களுக்கு ஆகாய கமனமும் பக்ஷியைப்போல பறக்கும் சக்தியுமுண்டாகிறது.

213 "ஹம்" ஆகாச தத்துவம், நிராகாரம், பலவர்ணம், இந்த தத்துவத்தை தியானிக்கிறவர்களுக்கு திரிகால ஞானமும் அணிமாதி அஷ்டசித்தியுமுண்டாகிறது.

214 ஸ்வர ஞானத்தைப்போல் தனம் வேறு கிடையாது. இதையடைந்து எந்தக் காரியத்தை உத்தேசித்து சென்றாலும் பலனடையாமல் வரமாட்டான்.

215 தேவி கேட்கிறாள் ஹே தேவாதி தேவா! ஸ்வரத்தினாலே திரிகால ஞானம் எப்படி யுண்டாகிறது.

216 ஹே பார்வதி! பூதபவிஷ்ய வர்த்தமானம் இம்மூன்று காலங்கள் ஜெய முதலான சுபம், தோல்வி முதலான அசுபம், இதுகளினுடைய ஞானம் ஸ்வரத்தின் ஞானத்தினாலேயே யுண்டாகிறது. இதற்கு வேறு உபாயமில்லை.

217 தத்துவத்தினாலேயே சுபா சுபகாரியம், ஜெயம், அபஜெயம், சுபிக்ஷம், துர்பிக்ஷம், இவைகள் உண்டாகின்றன. தத்துவம் காலத்திரயத்தையும் அனுசரித்திருக்கிறதென்று, ஞானிகள் சொல்லுகிறார்கள்.

218 ஹே தேவாதி தேவா! சம்சாரசாகரத்தில் மனிதனுக்கு சர்வ காரிய சித்தியையும் செய்யும்படியான சிநேகிதன் யார்? அதை எனக்குச் சொல்லவேண்டும்.

219 ஹே தேவி! மனிதனுக்கு பிராணன், முக்கிய மித்திரனும் சகாவாயுமிருக்கின்றான். பிராணனைப்போல் பந்து வேறொருவருமில்லை.

220 ஹே சங்கரா! வாயு பிராணனிடத்தில் எப்படியிருக்கிறது. தேகம் எப்படி பிராணமயமாயிருக்கிறது. தத்துவத்தினிடத்தில் சஞ்சாரம் செய்கிற பிராணனை எப்படி யோகியானவன் அறிகிறான். இதை எனக்குச் சொல்லவேண்டும்.

221 சங்கர-சரீரம் என்பது ஒரு நகரம் இதில் வாயு, ரக்ஷகன், இவன் உட்செல்லும்போது 10 அங்குலமும், வெளிக்கிளம்பும்போது 12 அங்குலமுமாய்ச் செல்லுகிறான்.

222 நடையில் 24 அங்குலம், ஓட்டத்தில் 42 அங்குலம் மைதுன காலத்தில் 65 அங்குலம், நித்திரையில் 100 அங்குலம் இவ்விதமாக பிராணனுடைய வேகம் உண்டாகிறது.

223 பிராணனுடைய சுபாவமான வேகம் 12 அங்குலந்தான். ஆனால் போஜன காலத்திலும், பேசும்பொழுதும் 18-அங்குல வேகமுண்டாகிறது.

224 பிராணனுடைய வேகம் 12 அங்குலமென்று சொல்லியிருக்
225 கிறது. அதில் ஒரு அங்குலம் யோகாப்பியாசத்தால் குறைத்தால் அவனுக்கு நிஷ்காமியப் பிராப்தி யுண்டாகிறது. 2

அங்குலம் குறைத்தால் ஆனந்தமுண்டாகிறது. 3 அங்குலம் குறைத்தால் கவித்துவ சக்தியுண்டாகிறது. 4 அங்குலம் குறைத்தால் வாக்குப்பலிதமுண்டாகிறது. 5 அங்குலம் குறைத்தால் தூர திருஷ்டி ஏற்படுகிறது. 6 அங்குலம் குறைத்தால் ஆகாய கமனம், 7 அங்குலம் குறைத்தால் பிரசண்ட வேகமுண்டாகிறது.

226 8 அங்குலம் குறைத்தால் சித்தி, 9 அங்குலம் குறைத்தால்
227 நவநிதிப் பிராப்தம், 10 அங்குலம் குறைத்தால் தசமூர்த்தித்வம் (அநேக ரூபம்) 11 அங்குலம் குறைத்தால் தன்னிழல் போகிறது. 12 அங்குலம் குறைத்தால் அம்சகதி கங்காமிர்த பானம், இவ்விதமாக 12 அங்குலத்தையும் ஜெயித்தால் அந்த வாயுவானது நகசிகை பரியந்தம் பூர்ணமாய் வியாபிக்கிறது. பிறகு அவனுக்கு எப்பொழுதும் அமிர்தபானம் உண்டாகிக்கொண்டேயிருத்தலினால் ஆகாராதிகள் தேவையில்லை.

228 எல்லாக் காரியத்திலும் பலத்தைக்கொடுக்கும்படியான இந்தப் பிராண விதியைச் சொன்னேன். பிராணயோகத்தினுடைய அப்பியாச சாரம்சங்களை குருவைத் தவிர கோடி சாஸ்திரங்களினாலும் அறிய முடியாது. குருவாக்கியத்தினாலே யறியவேண்டும்.

229 சூரிய உதயத்தில் சந்திரனும், அஸ்தமன காலத்தில் சூரியனுமிருந்தால் உத்தமம். பிராப்த யோகத்தினால் அவ்விதம் நடக்காவிட்டால் மத்தியமம் அல்லது மத்திய இரவில் அவ்விதமுண்டானால் அது சுபத்தைக் கொடுக்கக் கூடியதாயிருக்கிறது.

230 தூர யுத்தத்தில் சந்திரனும், சமீப யுத்தத்தில் சூரியனும் ஜெயத்தைக் கொடுக்கிறார்கள். உதயமாயிருக்கப்பட்ட நாடியின் பக்கத்துக்காலை முதலில் வைத்து நடக்க சர்வ சித்தி.

231 பிரயாணம், கல்யாணம், நகரப்பிரவேசம் முதலான சுப காரியங்களுக்கு சந்திரநாடி எப்பொழுதும் சுபத்தைக்கொடுக்கக் கூடியதாயிருக்கிறது.

232 அயனம், திதி, வாரம், இவைகட்குரிய ஸ்வரங்களும், தத்துவங்களும் சரியாய் நடக்கும்பொழுது ஒருவன் யுத்தத்திற்கு போனால் அவன் தன்னுடைய ஸ்வரஸ்தாபனத்தினால் சத்

த்ருவை ஜெயிக்கிறான். அவனுக்கு வைகுண்ட லோகத்திலும் விக்கினம் கிடையாது.

233 ஜீவாங்கத்தினிடத்தில் வஸ்திர பரிதானம் செய்துகொண்டு **"ஜீவம் ரக்ஷ, ஜீவம் ரக்ஷ"** யென்று யாரொருவன் ஜெபம் செய்கிறானோ அவன் யுத்தத்தில் உயிருடனிருந்து சர்வ பிருதிவியையும் ஜெயிக்கிறான்.

234 பிருதிவி, அப்பு இந்த தத்துவத்தில் சாந்த கர்மத்தைச் செய்யவும். அக்கினி, வாயு, இந்த தத்துவத்தில் உக்கிர காரியங்களைச் செய்யவும். ஆகாச தத்துவத்தில் மேற்சொன்ன இரண்டு காரியங்கள் செய்யப்படலாகாது.

235 பூர்ணாங்கத்திலேயே ஆயுதங்களைத் தரிக்க வேண்டியது. அந்தப் பக்கத்து கைகளினாலேயே பிரயோகிக்கவும் வேண்டும். கீழே ஆயுதங்களை வைக்கும்பொழுதும் பூர்ணாங்கத்தையினாலேயே வைக்கவேண்டும். இவ்விதம் செய்வானாகில் எப்பொழுதும் ஜெயமேயுண்டாகிறது.

236 வாகனங்களில் ஏறும்பொழுது பிராணவாயுவை ஆகர்ஷணம் செய்து கொள்ளவேண்டியது. குதிரையின் இடது பாகத்தில் காலை வைத்து ஏறவேண்டியது. இவ்விதம் செய்தால் சர்வ காரியமும் சித்தியாகிறது.

237 சூன்யாங்கத்தில் சத்துருவினுடைய சைன்னியமும், பூர்ணாங்கத்தில் தன்னுடைய சைன்னியமும் இருக்கும்படி அமைத்துக்கொண்டு பூர்ண தத்துவத்தில் யார் யுத்தம் செய்கிறானோ, அவன் தனியே சர்வ பிருதிவியையும் ஜெயிக்கிறான்.

238 சரீரத்தில் எந்த நாடி நடக்கிறதோ அந்தப் பக்கம் தெய்வம் வாசமிருக்கிறது. அந்தப் பக்கத்துக் காலை அதற்குரிய திசையில் முன் எடுத்துவைத்துப் போனால் சர்வ காரிய சித்தியுண்டாகும்.

239 முதலில் முத்திரையைச் செய்து பிறகு யுத்தம் செய்யவேண்டியது. எவனொருவன் சர்ப்ப முத்திரையை செய்கிறானோ அவனுக்கு சந்தேகமற சித்தியுண்டாகிறது.

240 சந்திரன் அல்லது சூரிய ஸ்வரம் நடக்கும்பொழுது யுத்தம் செய்யவேண்டுமென்கிற இச்சையுடன் வருகிற வீரனொருவன் சூன்ய பாகத்தில் நின்றால் தோல்வியும், பூர்ணாங்கத்

தில் நின்றால் ஜெயமுமென்று ஸ்வர தத்துவத்தை யறிந்தவன் அறியவேண்டியது.

241 எந்த திசையை நோக்கி வாயு நடக்கின்றதோ, அந்த திசையை நோக்கி நின்று, யுத்தம் செய்தால் இந்திரனே யுத்தத்திற்கு வந்தாலும் அவனை ஜெயிக்கிறான்.

242 எந்த நாடியில் வாயு நடக்கிறதோ, அந்தப் பாகத்தின் பிராணனை காது வரையில் ஆகர்ஷணம் செய்து யுத்தம் செய்தால் இந்திரனையும் ஜெயிக்கலாம்.

243 எவனொருவன் சத்துருவினுடைய அடி விழாதபடி தன் பூர்ணாங்கத்தை காப்பாற்றிக்கொள்ளுகிறானோ, அவனைச் சத்துரு எவ்வளவு பலவானாயிருந்தாலும் வெல்ல முடியாது.

244 கையினுடைய அங்குஷ்டம், தர்சனி இந்த விரல்களினாலும் காலின அங்குஷ்டத்தினாலும் தொனிக்கவேண்டியது. இவ்விதம் செய்வதினால் லக்ஷக்கணக்கான ஜனங்களிடத்திலும் யுத்தம் செய்து ஜெயிக்கிறான்.

245 சூரியன் அல்லது சந்திரன் நடக்கும்போது, இடையிலே வாயு நடந்துகொண்டிருந்தால் ஜெயத்தை இச்சித்த ஒருவன் திக் பட்சணம் செய்யவேண்டியது

246 சுவாசமானது உள்ளே பிரவேசிக்கும்போது தூதன் தான் இச்சித்த வார்த்தையை சொல்வானாகில் அந்த காரியம் சித்தியடையும். சுவாசமானது வெளியே செல்லும்போது சொல்வானாகில் காரியம் ஒருநாளும் முடியாது.

247 லாபகரமான எந்த சுபகாரியமும் பூர்ணாங்கத்தில் ஒருவன் நின்று சுவாசம் உள்ளே பிரவேசிக்கும்போது கேட்டாலும் சொன்னாலும் அப்படியே அந்தக்காரியம் சித்தியாகிறது. சுவாசம் வெளிப்படும்போது சொன்னாலும் கேட்டாலும் காரிய ஹானியுண்டாகிறது.

248 புருஷர்களுக்கு சூரிய நாடியும் ஸ்திரீகளுக்குச் சந்திரனும், யுத்தகாலத்தில் சுட்பாகமும் சிலாக்யம் இவ்விதமாக மூன்று நாடிகளினுடைய மூன்று வேகத்தையும் அறியவேண்டியது.

249 ஹகார ஸகாரத்தினுடைய பேதம் அறிந்தாலொழிய தாரக்கியானம் உண்டாகமாட்டாது. ஆகையால் ஹகார ஸகாரத்தினுடைய சொரூபம் அறியவேண்டியது. அறிவானேயானால் ஜீவன் ஹம்ஸ யோகம் என்கிற பதத்தினால் மேலான எல்லாப பதத்தையுமடைகிறது.

250 சூன்யாங்கமாயிருப்பதை பூரணம் செய்து ஜீவாங்கத்தை காப்பாற்றவேண்டியது. இவ்விதம் செய்தால் ஜெயப்பிராப்த முண்டாகிறது. ஜீவாங்கத்தை காப்பாற்றாமல் சூன்யாங் கத்தை காப்பாற்றினால் அழிவு ஏற்படும்.

251 வலது அல்லது இடது பக்கம் கேள்வி கேட்கிற ஒருவன் நின்று யுத்தத்தில் சென்றிருக்கிற ஒருவனைப்பற்றி கேட்டால் அவன் நின்ற பக்கம் உனக்கு பூர்ணமாயிருந்தால் கெடுதி யுண்டாகாதென்றும், சூன்யமாயிருந்தால் கெடுதி யென்றும் சொல்லவும்.

252 கேள்வி கேட்கிறகாலத்தில் பிருதிவி தத்துவம் நடந்தால் வயிற்றில் அடி, அப்பு தத்துவமாயிருந்தால் காலிலடி, அக் கினி தத்துவமாயிருந்தால் தொடையிலடி, வாயு தத்துவமா யிருந்தால் கையிலடியென்று சொல்லவும்.

253 ஆகாசதத்துவமாயிருந்தால் தலையிலடியென்று சொல்லவும். இவ்விதமான ஐந்து விதக்கெடுதியை ஸ்வரசாஸ்திரத்தில் சொல்லுகிறது.

254 யுத்தகாலத்தில் யுத்தத்திற்குபோகிறவனுக்கு சந்திர ஸ்வர மாயிருந்தால் இவனுக்கு ஜெயமும் சூரியஸ்வரமாயிருந்தால் எதிரிக்கு ஜெயமுமுண்டாகிறது.

255 யுத்த ஜெயவிஷயத்தில் சந்தேக முண்டானால் நாடியினு டைய மத்திய பாகத்தை கவனிக்கவேண்டியது. பிராணன் சுழிமுனையில் நடந்து கொண்டிருந்தால் யுத்தகளத்தில் சத் துருவினால் சங்கட முண்டாகிறதென்றறியவும்.

256 எந்த நாடி நடக்கிறதோ அந்த நாடிக்கு விரோதமான திசை யைநோக்கி நின்று யுத்தம்செய்கிறவனுக்கு ஜெயமுண்டா கிறது நிச்சயம். உதாரணமாக சந்திரநாடி நடக்குமானால் சூரியதிசையாகிய கிழக்கும் வடக்கும், சூரியநாடி நடக்குமா னால் சந்திரன் திசையாகிய தெற்கும் மேற்குமாகிய திசை யை நோக்கி நின்று யுத்தம்செய்ய ஜெய முண்டாகிறது.

257 யுத்தகாலத்தில் தனக்கு சந்திர நாடி நடந்து கொண்டிருந் தால் ஜெயமுண்டாகிறது. சத்துரு வசியமாகிறான்.

258 யுத்தகாலத்தில் சூரியஸ்வரம் நடந்தால் யுத்தம் செய்கிற வனுக்கு (தெய்வம், இராக்ஷதாள், மனுஷியாள் இவர்கள் யுத்தத்தில்) ஜெய முண்டாகிறது.

259 எவனொருவன் சந்திரநாடியில் யுத்தத்திற்குப் பிரயாணப்படுகிறானோ அவனை சத்துரு ஜெயிக்கிறான். சுழிமுனையில் பிரயாணம் செய்தால் யுத்தம் நடவாமல் எங்கேனும் சும்மாவிருக்கும்படி நேரிடும். சூரியநாடியில் புறப்பட்டால் நிச்சயமாய் ஜெயம் கிடைக்கும்.

260 இரண்டுபேர்கள் வந்து யுத்தவிஷயமாய் கேள்வி கேட்டால் எவனொருவன் பூர்ணாங்கத்திலிருந்து கேட்கிறானோ அவன் ஜெயமடைவானென்றும், சூன்யாங்கத்தில் நின்று கேட்கிறவன் அபஜெயமடைவானென்றும் சொல்லவும்.

261 பூர்ணாங்கத்தில் சத்துரு நின்றால் அவனைத் தனக்கு சூன்யாங்கத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது. சூன்யாங்கத்தில் எதிரிநின்றால் எதிரி நிச்சயமாய் மரணமடைகிறான்.

262 கேள்வி கேட்பவன் சந்திரநாடியிலிருந்து கேட்டால், அவன் வாயிலிருந்து புறப்படுகிற கேள்வியின் அக்ஷரங்கள் அல்லது ஜெயவிஷயத்தைப்பற்றிய நாம அக்ஷரங்கள், ஒற்றை யெழுத்துக்களா அல்லது இரட்டை எழுத்துக்களாவென்று எண்ணிப்பார்த்து, இரட்டையாயிருந்தால் ஜெயமும், ஒற்றையாயிருந்தால் அபஜெயமும்; அநேக சூரியநாடியில் ஒற்றை எழுத்துக்கள் ஜெயமும், இரட்டை எழுத்துக்கள் அபஜெயமுமென்றறியவும்.

263 கேள்வி கேட்பவன் சந்திரஸ்வரத்தின் பக்கமாய் நின்று கேட்டால் யுத்தம் ஆரம்பமென்றும் சூரியஸ்வரத்தின் பக்கமாய் நின்று கேட்டால் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறதென்றும் சொல்லவும்.

264 பிருதிவி தத்துவத்தில் யுத்தம் ஆரம்பித்தால் யுத்தம் சமமாக இருக்கும். அப்பு தத்துவத்தில் ஜெயமுண்டாகிறது. தேயு தத்துவத்தில் அபஜெயம் வாயு ஆகாச தத்துவத்தில் மரணமுண்டாகிறது.

265 எக்காரணத்தினாலாவது அல்லது நிகிலினாலாவது இன்னஸ்வரம் நடக்கிறதென்பது நிக்ஷயிக்கமுடியாத காலத்தில் புத்திமான்களாயிருக்கப்பட்டவர்கள் கீழ் கண்டவாறு செய்யவும்.

266 சலனமில்லா மனதுடன் தேகத்தைக் கோணலில்லாமல் சமமாய் வைத்துக்கொண்டு கையிலிருந்து ஒரு புஷ்பத்தை எதிரே பூமியில் போடவும். அது எந்தப்பக்கமாய் விழுகிறதோ அது பூர்ணாங்கமென்றும் மற்ற பாகம் சூன்யாங்கமென்றறியவும்.

267 யாதொரு காரியத்தைச் செய்யும்பொழுது நின்றுகொண்டாவது அல்லது உட்கார்ந்துகொண்டாவது மன உற்சாகமாய் யாதொருவன பிராண வாயுவை உள்ளே இழுக்கிறானோ அவன் அந்தக் காரியத்தை சித்தி செய்கிறான்.

268 காலன், சஸ்திரம், சர்ப்பம், சத்துரு, வியாதி, திருடன், இவைகள் ஒருவனுக்கு சூன்யாங்கத்திலிருந்தால் அவனுக்கு மேற்கண்டவைகள் யாதொரு தீங்கும் செய்யமுடியாது.

269 ஜீவ ஸ்வரத்தினாலேயே வாயுவை நிறுத்தவேண்டும். திரும்பவும் அதினாலேயே விடவேண்டும். தூது, கிரீடை, ஜீவசுரத்தினுடைய அங்கத்தினால் செய்தால் ஜெயப்பிராப்தி யுண்டாகிறது.

270 ஸ்வரக்கியானம் யாதொருவனுக்கு இருக்கிறதோ அவனை ஒருவராலும் ஜெயிக்க முடியாது. அவனுக்கு விரோதமாய் கோடிக்கணக்கான விரோதங்கள் செய்யினும் நிஷ்பலமாகிறது. ஸ்வரஞானி இகத்திலும் பரத்திலும் பலிஷ்டனாகிறான்.

271 சில அரசர்களுக்கு பத்து, நூறு, பதினாயிரம் லட்சக்கணக்கான வீரர்களுடைய பலமும் இந்திரன் பிரம்மாதி தேவர்களுக்கு கோடிக்கணக்கான வீரர்களுடைய பலமுமிருப்பதெல்லாம் ஸ்வரபலமேயென்றறியவும்.

272 ஹே சங்கரா! மனிதர்களின் யுத்தத்தில் ஜெயம் அபஜெயத்தைப்பற்றி சொன்னீர்கள். ஆனால் இயமனோடு யுத்தம் செய்யும்படியான சமயம் மனிதனுக்கு ஏற்பட்டால் அவன் ஜெயத்தை எப்படியடைவான்?

273 ஸ்திர மனத்துடனிருந்து ஈஸ்வரனைத்தியானம் செய்யவேண்டியது. பிராணனைக் கும்பகத்தில் நிறுத்தி ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டியது. இவ்வாறு செய்கிற மனிதனுக்கு இஷ்டசித்தி, மகாலாபம், ஜெயம் இவை யுண்டாகின்றன.

274 பிரபஞ்சமானது நிராகாரத்திலிருந்து உண்டாயிருக்கிறது என்ற ஞானம் உண்டானபிறகு, பிரபஞ்சமே நிராகாரமாகிறது. ஆகையால் பிரபஞ்ச திருஷ்டியினால் மனிதனுக்கும் இயமனுக்கும் தாரதம்மியம் உண்டாயிருக்கிறது. ஆனால் நிராகார திருஷ்டியினால் மனிதன், இயமன், புழுக்கள் இவைகளெல்லாம் (சமமாக) ஆகிவிடுகின்றன.

## வசீகரணப் பிரகரணம்.

275 ஹே சங்கரா! இதுவரையில் நாயுக்தம இயம யுக்தம் இவை களைச்சொன்னீர்கள். இப்பொழுது வசீகரணப் பிரகரணத்தைச் சொல்லவேண்டும்.

276 தனது நாயகிக்கு சந்திரஸ்வரம் நடக்கும்பொழுது தன்னுடைய சூரியஸ்வரத்தினாலே அந்தச் சந்திரனை ஆகிர்ஷணம் செய்து தன்னுடைய ஜீவஸ்வரத்தில் சேர்க்கவும். இவ்விதம் செய்தால் அந்த ஸ்திரீ, ஜென்மம் உள்ளவரையில் அவனுக்கு சுவாதீனமாகிறாளென்று தவத்தில் சிறந்த முனிவர்கள் சொல்லுகிறார்கள். பரஸ்திரீ விஷயத்தில் இவ்விதம் செய்தால் நாசமடைவான்.

277 புருஷனானவன் தன்னுடைய ஜீவஸ்வரத்தினாலே ஸ்திரீயினுடைய ஜீவஸ்வரத்தை கிரஹணம் செய்து ஸ்திரீயினுடைய ஜீவஸ்வரத்தில் தன்னுடைய ஜீவஸ்வரத்தைக் கொடுக்கவும். இவ்விதமாக ஜீவஸ்வரத்தினுடைய சேர்க்கை செய்தால் அந்த ஸ்திரீக்கு அந்தப்புருஷன் ஜென்ம பரியந்தம் பிரிய முள்ளவனாகிறான்.

278 இராக்காலங்களில் கடைசி ஜாமத்தில் ஸ்திரீயானவள் அயர்ந்து தூங்கும் பொழுது அவளுடைய சுழிமுனைநாடியை புருஷனானவன் உட்கொள்ளவேண்டியது. இவ்வாறு செய்தால் பிராணனுள்ளவரையில் புருஷனுக்கு வசியமாகிறாள்.

279 பிறகு சுழிமுனை ஸ்வரத்தின் கால அளவு சென்றதின் பிறகு அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜெபித்துத் தன்னுடைய சந்திரஸ்வரத்தை ஸ்திரீக்கு கொடுக்கவும். இவ்வாறு கொடுத்தால் க்ஷணமே அவள் மோகத்தையடைந்து வசியமாகிறாள்.

280 சயனகாலத்தில் ஆலிங்கன சமயத்தில்,

281 அல்லது வேறு எந்த சமயத்திலாவது எவனொருவன் தன்னுடைய சூரியஸ்வரத்தினால் தன் நாயகியின் சந்திர ஸ்வரத்தை இழுத்து உட்கொள்ளுகிறானோ, அவன் மன்மதனைப் போல் அவளுக்கு மோககாரகனாகிறான். சிவத்தினால் சக்தியையும், சக்தியினால் சிவத்தையும் யாதொருவன் சேர்க்கிறானோ, அவன் அந்த க்ஷணத்தில் நூறு ஸ்திரீகளுக்கும் மோகத்தை உண்டாக்குகிறான். (சிவம்-சூரியன், சக்தி-சந்திரன்.)

282 ஸ்திரீயினுடைய சூரியஸ்வரத்தில் புருஷனுடைய சந்திர ஸ்வரத்தை கொடுக்கவேண்டியதாயிருந்தால் (3, 5, 7, 9,) தடவைகளாகக்கொடுக்கவும். அவளுடைய சந்திரஸ்வரத்தில் புருஷனுடைய சூரியஸ்வரம் கொடுக்க வேண்டியிருந்தால் 2, 4, 6, தடவைகளாகக் கொடுக்கவேண்டியது. இவ்விதம் செய்தால் அந்த நாயகி வசியமாகிறாள்.

283 சூரியனையோ, சந்திரனையோ, சர்ப்பகதியாக ஆகிருஷ்ணம் செய்து ஒருதாமரை புஷ்பத்தை நாயகன், நாயகி இருவரும் உதடுகளில் ஒற்றவும். பிறகு அந்த புஷ்பத்தை முகத்தில் ஒற்றிக்கொண்டு உடனே ஸ்வரத்தை அந்தப்புஷ்பத்தில் சேர்க்கவும். இவ்விதமாக மேலே சொல்லியிருக்கிற கணக்குப்பிரகாரம் செய்யவும்.

284 மேலே சொல்லியபடி நாயகியானவள் நித்திரை செய்கிற வரையில் செய்யவும். பிறகு அவள் விழித்துக்கொண்டபின் அவளுடைய நேத்திரம், கழுத்து இவைகளை கம்பனம் செய்யவும்.

285 இவ்விதமாகப்புருஷன், பெண்களின் ஸ்வரத்தோடு கலந்தால் பெண்களை வசியப்படுத்துகிறான். ஆனால் இந்தப் பிரகாரத்தை ஸ்திரீலோலனாயிருக்கப்பட்டவனுக்கு சொல்லக்கூடாதென்று ஸ்ரீ சங்கரருடைய கட்டளை.

## கர்ப்பப் பிரகரணம்.

---

286 ருதுஸ்நானமான ஐந்தாம் நாள் ஸ்திரீயானவள் பதியுடன் கூடும்போது அவளுக்குச் சந்திர ஸ்வரமும் புருஷனுக்கு சூரியஸ்வரமும் நடக்குமானால் அநேக புத்ர உற்பத்தியாகி திவ்விய புத்திரன் உற்பத்தியாகிறான்.

287 ருதுஸ்நானமான ஸ்திரீயானவள் தனக்குபிருதிவி அல்லது அப்புதத்துவம் நடக்கும்போது, பசுப்பாலில் சங்கவல்லிப் பிரசனம் செய்து தனக்கு சம்போகத்தைக்கொடுக்கும்படி திரிவாரம் புருடனைப்பிரார்த்திக்கவும்.

288 ருதுஸ்நானம் செய்த ஸ்திரீக்கு மேற்சொன்ன ஔஷதத்தைக்கொடுத்து புருஷனானவன் சம்போகம், செய்தால் ரூபவானும் பராக்கிரம சாலியுமான புத்திரன் ஜனிக்கிறான்.

289 சூரியஸ்வரத்தோடு சுழிமுனை கலந்து தோன்றும்போது ருதுகாலத்தில் ஸ்திரீயை அணைந்தால் அங்கஹீனம், குரூபியான குழந்தைகள் பிறக்கும்.

290 ருதுவான நான்கு நாட்களுக்குபிறகு விஷம நாளில் (ஒற்றைப்படை நாட்களில்) சூரியஸ்வரத்தில் பிருதுவி, அப்பு, அக்கினி இந்தத்தத்துவங்களில் புருஷனானவன் கர்ப்பதானம் கொடுத்தால், மலட்டு ஸ்திரீக்கும் குழந்தை பிறக்கும்.

291 புருடனுக்கு சூரியனும் ஸ்திரீக்கு சந்திரனும் நடக்கும் போது, இருவரும் அணைந்தால் மலடிக்கும் புத்திர உற்பத்தி யுண்டாகிறது.

292 புருஷனானவன் அணையும்போது சூரியஸ்வரம் நடந்து காம இச்சை முடிந்த பிறகு சந்திரன் நடக்க ஆரம்பிக்குமானால் மகா யோகமென்றறியவும். தெய்வ ஹீனமுள்ளவனுக்கு இந்தப்பாக்கியம் கிடைக்காது.

293 கேள்வி காலத்தில் சந்திர ஸ்வரமாயிருந்தால் பெண் கர்ப்பமென்றும், சூரியனாயிருந்தால் ஆண் கர்ப்பமென்றும், சுழிமுனையாயிருந்தால் கர்ப்ப நாசமென்றுமறியவும்.

294 கேள்வி காலத்தில் பிருதிவி தத்துவமாயிருந்தால் பெண்ணென்றும், அப்பு தத்துவமாயிருந்தால் புத்திரனென்றும், வாயு தத்துவமாயிருந்தால் பெண்ணென்றும் தேயு தத்துவமாயிருந்தால் கர்ப்ப அழிவென்றும் ஆகாசமாயிருந்தால் அலியென்றும் சொல்லவும்.

295 சந்திர ஸ்வரகாலத்தில் கர்ப்பத்தைபற்றி கேள்வி கேட்டால் பெண்ணென்றும். சூரிய ஸ்வரத்தில் ஆணென்றும், சுழிமுனையில் அலியென்றும் சொல்லவும். கேள்வி கேட்கிறவன் பூர்ணாங்கத்திலிருந்து கேட்டால் குழந்தையுண்டாகுமென்று சொல்லவும்.

296 சூன்யாங்கத்திலிருந்து கேட்டால் சூன்யமென்றறியவும். இரண்டு ஸ்வரமும் நடக்கும்போது கேட்டால் இரட்டையுண்டாகும். சங்கிரமத்தில் அதாவது சுழிமுனையிலாவது அல்லது ஸ்வரம் பேதிக்கும் சமயத்திலாவது கேட்டால் கர்ப்ப அழிவு உண்டாகுமென்று தத்துவப் பிரக்ஞையுள்ளவனறியவும்.

297 வாயு தத்துவத்தில் கர்ப்பம் தரித்தால் அக்குழந்தை எக்காலத்தும் துக்கியாகும். அப்பு தத்துவத்தில் சுகமுடையவனாயும் பிரசித்திபெற்றவனுமாயிருப்பான். அக்கினி தத்துவத்தில் கர்ப்ப அழிவு உண்டாகும் அல்லது அற்ப ஆயுளென்று அறியவும். பிருதிவியில் போகியாயும், தனிகனாயும் கம்பீரமுடையவனாயுமிருப்பான்.

298 வருணதத்துவம் அதாவது அப்புதத்துவத்தில் கர்ப்பம் தரித்தால், தனவானும், சுகியாயும், போக போக்கியமுடையவனுயுமிருப்பான். ஆகாசத்திலோ கர்ப்பநாசம்.

299 பிருதிவி தத்துவத்தில் உத்தம புத்திரனுண்டாகிறுன். அப்பு தத்துவத்தில் சுகுணமாகிய கன்னிகையுண்டாகிறுள். இதர தத்துவங்களில் கர்ப்ப அழிவு அல்லது பிறந்தவுடன் இறந்துவிடும்.

300 சூரிய ஸ்வரம் நடக்கும் பொழுது சந்திர ஸ்வரம் நடக்கிறதையும் சந்திரஸ்வரம் நடக்கும்பொழுது சூரியஸ்வரம் நடக்கிறதையும் நல்ல பிரக்ஞையோடு சந்தேகமற குருமுகமாய் தெரிந்து கொள்ளவேண்டியது. காரணம் குருவைத்தவிர கோடி சாஸ்திரங்களினுலும், வேதாத்யாயனம் செய்ததினுலும் அறிவது துர்லபம்.

## வருஷ பலன்.

301 சித்திரை மாதம் முதல் தேதி (சைத்ர சுத்தப் பிரதமை) தக்ஷிணுயனம், உத்திராயணம் இந்த தினங்களில் நடக்கிற தத்துவ பேதத்தினுல் வருஷ பலனையறியவும்.

302 பிராத காலத்தில் சந்திர ஸ்வரம் நடந்துக்கொண்டிருந்தால் அதில் பிருதிவி, அப்பு, வாயு, இந்தத் தத்துவங்களும் நடந்தால் சர்வதானியங்களும், நன்முய் விளைந்து சுபிக்ஷமாயிருக்கும்.

303 தேயு ஆகாசம் இந்த தத்துவங்களாயிருந்தால் துர்ப்பிக்ஷம் உண்டாகும். இதே மாதிரியாக வருடம், மாதம், நாள், இவைகளின் பேரிலும் தத்துவ பலனை யறியவும்

304 சுழிமுனையானது குரூரமாயும் சர்வ காரியங்களுக்கு கெடுதலாயுமிருக்கிறது. இதானது மேற்சொல்லிய சைத்ர சுத்தப் பிரதமையில் நடந்துகொண்டிருந்தால் தேச பீடை, மகா ரோகம், சிரமம், கஷ்டம், இத்தியாதி துக்கங்கள் தேசத்திலுண்டாகின்றன.

305 மேஷ சங்கரமண சமயத்தில் ஸ்வரபேதத்தை கவனிக்கவும். அதிலுள்ள தத்துவ பேதங்களைக் கொண்டு வருஷ பலனைச் சொல்லவும.

306 பிருதிவி முதலிய தத்துவங்களினால் தினம், மாதம், வருடம் இவைகளின் பலனையறியவும். இதில் பிருதிவி, அப்பு, தத்துவம் நடந்தால் சுபபலன். அக்கினி, வாயு, ஆகாசம் இவைகளில் குரூர பலன்.

307 மேஷ சங்கிரமண காலத்தில் முதலில் பிருதிவி தத்துவம் நடந்தால் நல்ல விளைவு, தேச விருத்தி, ஏராளமான மழை சௌகரியம், ஏராளமான தானியங்கள் இவைகளுண்டாகின்றன.

308 அப்பு தத்துவமாயிருந்தால் அதிக மழை, சுபிக்ஷம், ஆரோக்கியம், சௌகரியம், ஏராளமான தானிய உற்பத்தி யென்றறியவும்.

309 அக்னி தத்துவமாயிருந்தால், துர்ப்பிக்ஷம், தேச பீடை, சந்ததி நாசம், தானிய நாசம், அற்பமழை, இந்த பலன்களென்றறியவும்.

310 வாயு தத்துவமாயிருந்தால், அற்ப மழை, அதிக மழையினால் பயம், முதலிய அறுவகை விக்னம் பயிருக்குண்டாகும்.

311 ஆகாச தத்துவமாயிருந்தால், தானிய ஹானி, சுக ஹானி, ஏற்படும்.

312 பூரணமாயும், சுவாசம் உள்ளே பிரவேசிக்கிற சமயமுமாயிருந்தால் மேலே சொல்லப்பட்ட தத்துவங்களினால் தானிய சித்தியுண்டாகிறது. ஆனால் தத்துவோதய வேளையில், சூரியன் அல்லது சந்திர ஸ்வரம் விபரீதமானால் அதாவது சந்திரன் நடக்கவேண்டிய காலத்தில் சூரியனும், சூரியன் நடக்கவேண்டிய காலத்தில் சந்திரனும் நடந்தால் மாத்திரம் தானிய சங்கிரகம் செய்தால் சுகம்.

313 விஷம நாடி (சுஷும்ண நாடி)யில் முதலில் அக்கினி தத்துவமாயிருந்து பிறகு ஆகாச தத்துவம் உதயமானால் சர்வ வஸ்துக்களையும் சேர்க்கவும். காரணம் யாதெனில் இரண்டு மாதத்திற்குள் சகல வஸ்துக்களின் விருத்தியுண்டாகும்.

314 இராக்கால முடிவில் சந்திர ஸ்வரம் நடந்து பிராதக் காலத்தில் சூரியன் நடக்குமானால் அந்த நாடியிலேயே ஆகாசம் வாயு, அக்கினி, உதயமானால் பூமியில் அநேக அநர்த்தங்களுண்டாகி ஜனங்களுக்கு யாதனை யுண்டாகிறது.

## ரோகப் பிரகரணம்.

315 பிருதிவி தத்துவத்தில் கேள்வி கேட்டால் சரீர ரோகமென்றும், அப்பு தத்துவத்தில் ஜல சம்மந்தமான வியாதியென்றும், தேயு தத்துவமாயிருந்தால், கிராமாந்திரங்களிலுள்ள துஷ்ட தெய்வங்கள், பிதுர்க்கள் தோஷமென்றும் கூறவும்.

316 கேள்வி கேட்கிறவன் முதலில் சூன்யாங்கத்திலிருந்து பிறகு பூர்ணாங்கத்திற்கு வந்தால் வியாதியஸ்தன் மூர்ச்சை யடைந்திருந்தாலும் உயிருக்கு அபாயமில்லையென்று சொல்லவும்.

317 பூரணாங்கத்திலிருந்து கேள்வி கேட்டால் அந்த மனிதன் அநேக ரோகங்களிலிருந்து துன்பப்பட்டாலும் இறக்கமாட்டானென்று சொல்லவும்.

318 சூரியனில் வாயு நடக்கும்போது தூதுவன் வந்து குரூரமான அக்ஷரங்களை உச்சரித்து கேள்வி கேட்பானாகில் ரோகியானவன் பிழைப்பான். சந்திரன் நடக்கும்போது குரூர அக்ஷரங்களை உச்சரித்து கேள்வி கேட்டாலும் அநேக பலன் உண்டாகிறது.

319 பூரணாங்கத்தில் நின்று உயிருள்ள வஸ்துக்களை கையிற் பிடித்துக்கொண்டாவது, அல்லது அவைகளை பார்த்துக்கொண்டாவது, உயிருடனிருப்பவனைப்பற்றி கேள்வி கேட்டால் அது சுபம்.

320 இடை அல்லது பிங்கலையில் வாயு நடக்கும்போது, அல்லது பிரவேசம் செய்யும்பொழுது, தூதன் பூரணாங்கத்தில் நின்று கேள்வி கேட்டால் அவனுக்கு இஷ்ட சித்தியுண்டாகிறது. இதில் சந்தேகமேயில்லை.

321 கேள்வி கேட்கும்பொழுது, தாழ்ந்த இடத்திலிருந்து கேட்பானாகில், அவன் உயிருடனிருப்பான். உயர்ந்த இடத்திலிருந்து கேட்பானாகில் இயமலோகத்திற்கு செல்வானென்று சொல்லவும்.

322 கேள்வி கேட்பவன் விபரீத அக்ஷரத்தினால் கேள்வி கேட்டு சூன்யாங்கத்தில் நின்றாலும் அதே நேரத்தில் சுழிமுனை உதயமானாலும் விபரீத பலனென்று சொல்லவும்.

323 சந்திர ஸ்வரம் நடக்கும்போது, சூன்யாங்கத்தில் நின்று வியாதியஸ்தனைப்பற்றி கேள்வி கேட்டால், அவன் நூறு வைத்தியர்களிடம் மருந்து சாப்பிட்டாலும் கடைசியில் மரணமடைவான்.

324 சூரிய ஸ்வரம் நடக்கும்போது சந்திரனிலிருந்து அதாவது சூன்யாங்கத்திலிருந்து கேள்வி கேட்டால் சாக்ஷாத் சங்கரனே அவனைக் காப்பாற்ற கங்கணம் கட்டிக்கொண்டிருந்தாலும், அவன் பிழைக்கமாட்டான்

325 ஒரு பூதம் மிதமிஞ்சினால் ரோகம் அதிக உபத்திரவப்படுத்துகிறது. இரண்டு பூதம் மிதமிஞ்சினால் பந்து அல்லது இஷ்டமித்திரனுடைய நாசம் உண்டாகிறது. ரோகஸ்தன் மரணத்தையடைகிறான்.

326 மாசம், பக்ஷம், வருடம், இவைகளின் ஆரம்பத்தில் ஸ்வரத்தினுடைய சஞ்சாரத்தின்மேல் ஸ்வர ஞானியானவன் க்ஷய காலத்தையறியவும்.

327 பஞ்ச பூதமயமாகிய தீபமானது சிவசொரூபத்தோடு கலந்திருக்கிறது. சூரிய ரூபமாகிய வாயுவினால் பாதுகாக்கவேண்டியது. இவ்விதம் செய்தால் ஜீவன் ஸ்திரமாயிருக்கிறது.

328 பகலில் சந்திர ஸ்வரத்தையும், சூரியன் அஸ்தமித்த உடன் அதாவது இராக்காலங்களில் சூரிய ஸ்வரத்தையும், நடக்கும்படி ஒருவன் செய்வானாகில் அநேக நாள் உயிர் பெற்றிருப்பான்.

329 பிரம்மாண்டத்திலுள்ள ஆகாசத்திலிருந்து அமிர்த தாரையுண்டாகிறது. அப்போது சரீர ரூபமாகிய தாமரை மலர்ந்து பிரகாசிக்கிறது. இதனால் கர்ம யோகத்தை அப்பியசிக்கிறவன் சந்திரனை ஆஸ்வியபித்தால், அவன் மரணமற்றிருக்கிறான்.

330 பகலில் சூரிய ஸ்வரத்தையும் இரவில் சந்திர ஸ்வரத்தையும் நீக்கவேண்டியது. இவ்விதம் அப்பியாசம் செய்கிறவன் யோகியாகிறான். இதில் சந்தேகமேயில்லை.

331 ஒருவனுக்கு இரவும் பகலும் ஒரே ஸ்வரம் நடந்துகொண்டிருந்தால், அவன் மூன்று வருஷங்களில் மரணமடைகிறான்.

332 இரண்டு இராப்பகல் ஒருவனுக்குச் சூரியகலை நடந்தால் அவன் இரண்டு வருடங்கள் உயிர் பெற்றிருப்பானென்று ஸ்வர தத்துவத்தையறிந்த ஞானிகள் சொல்லுகிறார்கள்.

333 ஒருவனுக்கு இராப்பகல் மூன்று நாள் ஒரே ஸ்வரம் நடக்குமானால் அவன் ஒரு வருஷம் ஜீவித்திருப்பான்.

334 ஒருவனுக்கு சந்திர ஸ்வரம் இரவிலும், சூரிய ஸ்வரம் பகலிலும் இடைவிடாது நடக்குமானால், அவனுக்கு ஆறு மாதத்தில் மரணமென்று சொல்லவும்.

335 திறந்த வெளியில் ஓர் பாத்திரத்தில் ஜலத்தை வைத்து அதில் சூரியனுடைய பிரதி பிம்பத்தைப் பார்க்கும்போது தெற்கே குறைந்திருந்தால் ஆறு மாதத்தில் மரணம், மேற்கே மூன்று மாதம், வடக்கே இரண்டு மாதம், கிழக்கே ஒரு மாதத்தில் மரணம், மத்தியில் துவாரங்கள் கண்டால் பத்து நாளில் மரணம், அந்தப் பிரதி பிம்பம் முழுவதும் புகையடைந்ததுபோல் தோன்றினால் அதே தினத்தில் மரணமென்று அறியவும். இவ்வாறு ஸர்வக்ஞ முனிவர் ஆயுட் பிரமாணத்தைக் கூறுகிறார்.

336 தூதுவன் அல்லது வியாதியஸ்தன் சிவப்பு, கறுப்பு, காவி இந்திர வஸ்திரங்களை உடுத்திக்கொண்டும், எண்ணெய்த்தலையோடும், பல்லில்லாதவனும், தலை முண்டிதமுள்ளவனும், அசுத்தமுள்ளவனும், இவ்வகையுள்ளவன் பூரணைக்கத்தில் வந்து கேள்வி கேட்டாலும் வியர்த்தம். விபூதி, அக்கினி, கப்பரை, கயிறு, உலக்கை, இவைகளுடன் கூடிய அஸ்தமான காலத்தில் சூன்யாங்கத்தில் தூதாக வருவானேனல் வியாதியாளன் மரணமடைகிறானென்று சொல்லவும்.

337 திடமென்று சித்தம் விகாரத்தையடைந்தாலும், தேகத்தில் மாறுதல் உண்டானாலும், நிஷ்காரணமாய் இந்திரியங்களில் துர்ச்சின்மையுண்டானாலும், இவைகள் சன்னிபாதத்தின் லக்ஷணங்களென்றறியவும்.

338 சரீரம் திடமென்று கில்விட்டுப்போய் விலக்ஷண விகாரத்தையடைந்தால் அரிஷ்டமென்றறியவும். இவ்விதமாய் அரிஷ்டங்களை சுருக்கமாகச் சொன்னேன். இனி விஸ்தாரமாகச் சொல்லுகிறேன்.

339 எவனொருவனை துஷ்ட ஸ்தலத்தில் சந்தோஷமும், கல்லைசப்தத்தில் பர்வதாகாரமுமடைகிறதோ, அவன் மரணத்தருவாயிலிருக்கிறானென்றறியவும்.

340 நாசியிலிருந்து வருகிற சுவாசம் சில்லிட்டும் வாயிலிருந்து வருகிற காற்று நெருப்பைப்போல் சுடுகையாயுமிருந்தால், அவனுக்கு மகா பண்டிதன் சிகிச்சை செய்தாலும் மரணமடைகிறான்.

341 எவனொருவனுக்கு நாக்கு, ஆகாசம், துருவம், தேவமார்க்கம், மாத்ருகை, அருந்ததி, சந்திரன், சுக்கிரன், அசுவினி நக்ஷத்திரம் இவைகளில் யாதொன்று தன் எதிரிலிருந்தும் வியக்தமாய் தெரியவில்லையோ, அவன் அவசியமாய் ஒரு வருஷத்தில் மரணமடைகிறான்.

342 எவனொருவனுக்கு சூரியன், சந்திரன், அக்னி, இவைகள் கிரணங்களின்றி காணப்படுகிறதோ அவனுக்கு பதினொரு மாதம் ஆயுளென்று சொல்லவும்.

343 சொர்ப்பனத்தில் அல்லது ஜாக்கிரதையில் மல மூத்திர விசர்ஜனம் செய்யும்போது அந்த இடத்தில் பொன் அல்லது வெள்ளி, கண்ணுக்குப் புலப்பட்டால் அவன் பத்து மாதத்திற்குமேல் ஜீவித்திருக்கமாட்டான்.

344 தீபம் சில சமயங்களில் பொன்னைப்போல் மஞ்சளாயும், சில சமயங்களில் கருமையாகத் தெரிந்தாலும், சர்வ பூதங்களும் விபரீதமாய் காணப்பட்டாலும், அவன் ஒன்பது மாதத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டான்.

345 ஸ்தூல தேகியாயுள்ள ஒருவன் திடீரென்று மெலிந்தாலும், மெலிவாயிருப்பவன் திடீரென்று ஸ்தூலித்தாலும், சுரூபமும் கருப்பாயுமிருக்கப்பட்டவன் திடீரென்று பொன்னிறமானாலும், சூரனாயிருந்து பயங்காளியானாலும், தர்மிஷ்டனாயிருந்து அதர்மிஷ்டனானாலும், சாந்தனாயிருந்து சஞ்சலமடைந்தாலும், அவன் எட்டு மாதத்திற்கு மேலிருக்கமாட்டான்.

346 ஒருவனுக்கு உள்ளங்கையிலும், நாக்கின் நுனியிலும் பீடை
347 அல்லது நோயுண்டானாலும், இரத்தம் கருப்பாயும் குத்தினால் இரத்தம் சொட்டாமலிருந்தாலும் அவனுக்கு ஏழு மாதமும், கைகளில் நடு மூன்று விரல்கள் மடக்க முடியாமலும், கழுத்து, தோள்களென்று இல்லாமலே மெலிந்து வந்தாலும், பேசிக்கொண்டிருக்கும்போது அடிக்கடி மறதி காரணமாய் கேட்ட சங்கதிகளையே திருப்பக் கேட்டாலும், பிரக்ஞாபங்கமுண்டானாலும் ஆறு மாதத்திற்கு மேலிருக்கமாட்டான்.

348 நெஞ்சு குளிர்ந்து சுருங்கிப்போனாலும் பிரக்ஞாபங்கமுண்டானாலும், ஐந்து மாதங்களில் இறப்பான்.

349 சூரியப் பிரகாசம் (தேஜஸ்) பார்வையில்லாமலிருந்தாலும், நேத்திரத்தில் பீடையுண்டானாலும், நான்கு மாதத்தில் மரணம் நிச்சயமாயுண்டாகிறது.

350 பல்லிலும், விருஷணத்திலும் ஸ்மரணையில்லாமலிருந்தால் மூன்று மாதத்திற்குமேல் மரணத்தையடைகிறான்.

351 மரண காலம் தூரமென்றும் சமீபமென்றும் எந்த உபாயத்தினால் அறிய முடியுமோ, அதை சிவாகமத்தில் சொல்லிய பிரகாரம் சுருக்கமாய் சொல்லுகிறேன்.

352 நிர்மானுஷ்யமான ஆரண்ணியத்தில் ஏகாந்தமாய்ச் சென்று சூரியனைப் பிருஷ்ட பாகத்தில் வைத்துத் தன்னுடைய நிழலின் கண்டத்தில் நிர்ச்சலமாய்ப் பார்க்கவும்.

353 பிறகு ஆகாயத்தைப் பார்க்கவும். பார்த்து "ஓம் ஹ்ரீம் பரப்பிரம்மணே நம:" என்கிற மந்திரத்தை 108 முறை ஜெபித்தால் ஸ்ரீ சங்கரனுடைய தரிசனமுண்டாகும்.

354 ஜெப முடிவில் சுத்த ஸ்படிகத்தைப்போன்ற வெண்ணிறமுடையவரும், நானு ரூபத்தைத் தாரணை செயயும்படியான ஸ்ரீசங்கரர் கட்புலனுக்குத்தோன்றுகிறார். இவ்விதமாக ஆறுமாதம் அப்பியாசம் செய்தால் அவன் சர்வ பூசரப் பிராணிகளுடைய அரசனாகிறான் இரண்டு வருடம் அப்பியசித்தால் சிருஷ்டி கர்த்தாவாயும், சம்மார கர்த்தாவாயுமாகிறான்.

355 இவ்விதமாக எப்பொழுதும் அப்பியாசம் செய்து கொண்டிருந்தால் திரிகால ஞானமுண்டாகி பரம ஆனந்தத்தில் சதாகாலமுமிருக்கிறான். அவனுக்கு யாதொரு காரியமும் துர்லபமல்ல.

356 மேற்சொல்லிய ரூபமானது நிர்மலமாகிய ஆகாசத்தில் கிருஷ்ண வர்ணமாய் எவனுக்கு புலப்படுகிறதோ, அப்போப்பட்ட யோகியானவன் சந்தேகமின்றி ஆறுமாதத்தில் மரணமடைகிறான்.

357 மஞ்சள் நிறமாய் புலப்பட்டால் வியாதி, சிவப்பு நிறமாய் காணப்பட்டால் பயம். நீல நிறமானால் ஹானியுண்டாகும். பலவர்ணமான சித்திர ரூபம் தோன்றினால் சித்திப்பிராப்தமாகும்.

358 சாயா புருஷனுடைய பாதம், கால், வயிறு, இவைகள் விபமமாய் கட்புலனுக்குத் தெரியாமலிருந்து பிறகு புயங்கள் மறையுமானால் யோகி மரணமடைகிறான்.

359 இடது கை மறையுமானால், பாரியை நாசம், வலதுகை மறைந்தால், பந்து நாசமாகி அவனுக்கும் மரண மென்றறியவும்

360 சாயையானது தலையில்லாமலிருந்தால், ஒரு மாதத்திலும் துடையில்லாமலிருந்தாலும், தோளில்லாமலிருந்தாலும், எட்டு தினத்திலும், சாயையே முழுவதும் மறையுமானால் அந்த க்ஷணமே மரணமடைகிறான்.

361 பிராதக்காலத்தில் சூரியன் பின்னலிருக்கும்போது சாயா புருஷனுடைய விரலும் உதடும் தெரியுமானால் ஒரே நிமிடத்தில் மரணமடைகிறான். சாயா புருஷனுக்கும் இவனுக்கும்

தூரமின்றி சமீபமாயிருந்தால் அவை நிமிடத்தில் மரணம டைகிறான். சாயா புருஷனுடைய காது, தோள், கை, முகம், விலா, ஹிருதயம், இவைகள் ஒரே தடவையில் திடீ ரென்று தெரியாமலிருந்தால் அவை க்ஷணத்தில் மரண மடைகிறான் சாயா புருஷனுடைய தலையில்லாமல் காணப் பட்டு, திக்பிரமை கொள்வானாகில் அவன் ஆறுமாதம் வரை யில் பிழைத்திருப்பான்.

362 விடாமல் பதினாறு நாள் வரையில் சூரிய ஸ்வரமே நடந்தால், ஒருவன் ஒரு மாதத்திற்குள் மரண மடைவான்.

363 ஒரு மாதம் வரையில், ஒருவனுக்கு சந்திர ஸ்வர உதயமே யில்லாமல் சூரிய ஸ்வரமே நடந்தால் பதினைந்து நாளில் மரணமேற்படுமென்று கால ஞானிகள் சொல்லுகிறார்கள்.

364 மலம், மூத்திரம், அபான வாயு, இவை மூன்றும் ஒரே காலத்தில் உண்டானால் பிராணனானது சஞ்சலத்தையடைந் திருக்கிறதென்று தெரிந்து கொள்ளவும். அப்பேர்ப்பட்ட மனிதன் பத்து நாட்களில் மரணமடைகிறான்.

365 சதா காலமும் சந்திரனே நடந்து கொண்டிருந்து சூரிய ஸ்வரமே சற்றேனும் நடவாமலிருந்தால், அவன் ஒரு மாதத் திற்குள் மரணமடைகிறானென்று காலஞானிகள் சொல்லு கிறார்கள்.

366 எவனொருவனுக்கு ஆயுள் க்ஷீணமாயிருக்கிறதோ அவன் அருந்ததி, துருவம், விஷ்ணுபதம், மாதுருமண்டலம் இவைகளைப்பார்க்கமாட்டான்.

367 அருந்ததியென்றால் நாக்கு, துருவமென்றால் நாசிநுனி. விஷ்ணுபதமென்றால் புருவம். மாதுரு மண்டலமென்றால் தாரகம (தாரகமென்பது கண்ணுக்குள்ளிருக்கும் பாவை)

368 புருவம் தெரியாமலிருந்த நாள் முதற்கொண்டு ஒன்பது நாளில் மரணமடைகிறான். காதில் சப்தம் கேட்காமலிருந்த நாள் முதற்கொண்டு ஏழுநாளில் மரணமடைகிறான். கண்ணி லுள்ள தாரகம் (பாவை) தெரியாமல் போனால் ஐந்து நாளில் மரணமடைகிறான். நாசிநுனித்தெரியாமல் போனால் மூன்று நாளில் மரணமடைகிறான். நாக்குத்தெரியாவிட்டால் ஒரே நாளில் மரணமடைகிறான்.

369 கண்களின் கடைக்கண்ணில் விரல்களினால் அழுக்கிப்பார்க்க பிந்து தெரியாமல் போனால் பத்து நாட்களில் மரண மடைகிறான்.

370 தீர்த்தஸ்நானம், தானம், ஜெபம், தியானம், யோகம், இத்தியாதி புண்ணிய கர்மங்களினால் இயமனை ஜெயிக்கலாம்.

371 அநேக துராச்சாரங்களினாலேயும், தாதுக்களிலிருக்கிறமலங்களினாலேயும் இந்த சரீரம் நாசமாகிறது. வாயுவானது சரீரத்தில் எப்பொழுதும் இருக்கிறதினால் பலம், தேஜசு. இவைகளை விருத்தியாக்குகிறது.

372 தேகமானது தர்மார்த்த காம மோக்ஷங்களுக்குக் காரணமாயிருப்பதால் சரீரத்தை சவரக்ஷணை செய்ய வேண்டியது. இதற்கு முந்திய சுலோகங்களில் சொல்லப்பட்ட தோஷங்கள் யோகாப்பியாசத்தினால் நாசமடைகிறபடியால், யோகத்தை அவசியம் செய்ய வேண்டியது. செய்தால் மேற்கண்டவைகள் சாத்தியமாகிறது. மேற்கண்ட தோஷங்கள் அசாத்தியமாயிருப்பதால் பிராணனின் நாசத்தைச்செய்கிறது. இதற்கு யாதொரு பரிகாரமும் கிடையாது.

373 எவனுடைய ஹிருதயத்தில் அஞ்ஞானக்கூட்டத்தை நாசம் செய்யும்படியான, அநாதியானதும் ஒப்பு உவமையில்லாததும் அத்தியந்த ரகசியமானதுமாகிய இந்தச்சிவன்யோகஞானம் நிரந்தரமாயிருக்கிறதோ, அவனுடைய சரீர காந்தியானது பூரண சந்திரனைப்போல் உல்லாசமாய் நிறைந்திருக்கிறது சொப்பனத்திலும் கூட காலனால் அவனுக்குப்பயமுண்டாகமாட்டாது என்பது திண்ணம்.

374 இடைகலையாகிய வாம நாடியானது கங்கையென்றும், பிங்கலையாகிய தக்ஷிண நாடியானது யமுனையென்றும், சுழிமுனை-சரஸ்வதியென்றும் அறியவும். இந்த நாடித்திரயங்களுடைய சங்கமமானது பிரயாகைக்குச் சமமாயிருக்கிறது.

375 ஆதியில் தாத்காலம் சுவாசத்தை உத்பன்னம் செய்யும்படியான சாதனம் சொல்லியிருக்கிறது. அதாவது யோகியானவன் பத்மாசனத்தைப்போட்டுக்கொண்டு ஒட்டியாண பந்தனம் சாதிக்கவும்.

376 பிறகு தேகசுத்தியுண்டாக வேண்டியதற்காக யோகியானவன் பூரகம், கும்பகம், இரேசகம் என்று சொல்லப்பட்ட பிராணாயாமத்தைச்செய்ய வேண்டியது.

377 பூரகம் (வெளியே இருக்கப்பட்ட சுவாசத்தை உள்ளே இழுத்தல்) செய்வதினால் தேகத்தினுடைய தாதுக்களை சமப்படுத்துகிறது. கும்பகம் (வெளியேயும் உள்ளேயும் வாயுவை சலனப்படாமல் கட்டுப்படுத்தல்) செய்வதினால் ஜீவனை எப்பொழுதும் ரக்ஷிக்கிறது.

378 இரேசகம் (கும்பித்திருந்த வாயுவை வெளியில் விடுதல்) செய்வதால் பாவம் நாசமடைகிறது. இவ்விதமாய் முக்குணங்களையுடைய பிராணாயாமம் செய்தலால் யோகத்தின் ஸ்திரம் ஏற்படுகிறது. பிறகு யுத்தகளத்தில் நின்றவீரனைப் போலிருந்து லய பந்தம் செய்யவும்.

379 வாயு ஸ்தம்பனம் அதாவது கும்பகம் சகஜமாய் ஏற்படுகிற அளவு சக்திக்கேற்ப செய்யவும். இரேசகம் சந்திர நாடியில் செய்யவும். பூரகம் சூரிய நாடியில் செய்யவும்.

380 சந்திரஸ்வரம் சூரியனோடு லயப்படுகிறதும் சூரியஸ்வரம் சந்திரனோடு லயப்படுகிறதுமான அப்பியாசத்தை செய்கிற யோகியானவன் சூரிய சந்திராளுள்ள வரையில் ஜீவித்திருப்பான்.

381 எந்த ஸ்வரம் நடக்கின்றதோ அதை உள்ளேயிழுத்து வாயின் வழியாய் வெளியே செல்லவொட்டாமல் பந்தனம் செய்து வருகிற யோகியானவன் யௌவன பருவத்தை யடைகிறான்.

382 வாய், நாசி, நேத்திரம், காது, இவைகளை விரலினால் அமுக்கிக்கொண்டு தத்துவ உதயத்தையறியவும். இந்த முத்திரைக்கு ஷண்முகி கரணம் என்று பெயர்.

383 ஷண்முகி முத்திரையின் மார்க்கத்தை யறிந்த யோகியானவன் அதன் வழியாக ரூபம், கதி, ருசி, மண்டலம், இந்த லக்ஷணங்களை யறிகிறான்.

384 நிஷ்பிரகமாயும், சுசியாயும் யாதொரு சிந்தனையுமில்லாமல் மேற்கண்ட முத்திரையை அனுஷ்டிக்க வேண்டியது. இவ்விதம் அனுஷ்டிக்கிற யோகியானவன் இயமனையும் ஜெயிக்கிறான்.

385 சர்வ ஜெகத்தையுமறியும்படியான சக்தி நேத்திரத்திலிருந்து
386 வெளிப்படுகிறது. அந்த சக்தியினிடத்தில் எவனுடைய மனதானது ஒரு பிரகாரம் ஸ்திரமாய் நிற்கிறதோ அவனுடைய ஆயுள் நாளொன்றுக்கு மூன்று கடிகைப்பிரமாணம் வளர்கிறதென்று ஸ்ரீ சங்கர தந்திரத்தில் சித்தர்களுடைய குணத்தை வர்ணிக்கும்போது ஸ்ரீ சங்கரர் சொல்லியிருக்கிறார்.

387 யோகியானவன் பத்மாஸனத்திருந்துகொண்டு குய்யத்திலிருக்கப்பட்ட அபானவாயுவை பிராண சக்தியினுடைய உதவியினால் மேலிழுத்து ஒரு ரூபமாக்கி பிறகு சுழிமுனை

வழியாக அந்த வாயுவை பிம்மரந்திரத்தினிடத்தில் கொண்டு போய் ஆகாசமார்க்கத்தில் வைத்து சிவசரணத்தில் சேர்க்கவும். அந்த யோகியானவன் இந்த ஸ்திதியிலிருந்து பிராணோத்கிரமணம் செய்கிருனே அவன் தன்யனுகிருன்.

388 யாரொருவன் இந்த ஸ்வரசாஸ்திரத்தைஅப்பியசித்தாலும் பாராயணம் செய்தாலும் சர்வதுக்கத்திலுமிருந்து முக்தனாகி இச்சித்த பலனையடைகிருன்.

389 ஸ்வரக்கியானம் அறிந்த ஞானிகளிடத்தில் இலக்ஷ்மியானவள் ஸ்திரமாய் வாசம் செய்வாள். அவன் அதிக சுகத்தையடைவான்.

390 சர்வ வேதங்களிலும் பிரணவமானது எப்படி பூஜ்யமானதோ, பிராமணர்களுக்கு சூரியன் எப்படி பூஜ்யனோ, அவ்வாறு ஸ்வரக்யானியானவன் இப்பூவுலகில் பூஜ்யனுகிருன்.

391 யாரொருவனுக்கு மூன்று நாடிகளிலும், தத்துவங்களிலும் ஞானமிருக்கிறதோ அவனுக்குக் கோடி ரசாயனமும் ஈடல்ல.

392 ஏகாக்ஷரத்தை எவனொருவன் உபதேசிக்கிருனோ, நாடிகளின் பேதங்களை எவனொருவன் விவரித்துரைக்கிருனோ அப்பேர்ப்பட்டவனுக்கு எந்த திரவியத்தைக் கொடுத்தாலும் சிஷ்யன் ருணமுக்தனுகிருன். அத்தகைய திரவியம் இப்பூவுலகிலே இல்லை.

393 ஹே பார்வதி! இந்த சாஸ்திரத்தில், ஸ்வரம், தத்துவயுத்தம், ஸ்திரீ வசீகரணம், கர்ப்பதானம் ரோகம், இவ்விஷயங்களின் நிர்ணயத்தை ஒரு பாதி கலையில் செய்யக்கூடும்.

394 இவ்விதமான இந்த சாஸ்திரத்தை இந்த லோகத்தில் சித்தயோகிகள் வெளியிட்டிருக்கிருர்கள். இதை சந்திர சூரிய கிரகண காலங்களில் பாராயணம் செய்தால், சித்திப்பிராப்தமாகிறது.

395 தன் சொந்த ஸ்தலத்தில் ஸ்திரமாய் உட்கார்ந்து நித்திரை ஆகாரம், இவைகளை மிதமாய் வைத்துக்கொண்டு ஹிருதயத்தில் ஸ்வர ரூபமாகியபரமாத்மாவை ஒருவன் சிந்தனை செய்தால் அவனுக்கு ஸ்வரக்யான முண்டாகி மேலான பதவியுண்டாகும். சுபம்.

(முற்றிற்று.)

---

வாசன் அச்சுக்கூடம், தஞ்சை.